## ஒன்று, இரண்டு, மூன்று
### சீக்கிரம்... பாரெக்ஸ்* புத்தகம்* பெறுவீர்

# இலவசம்




இது புதிய தாய்மார்களுக்கு அவசியம்!

*குழந்தையின் சீரான உடல் வளர்ச்சிக்கு உதவும் முதல் திட உணவு பற்றித் தெரிந்து கொள்ளுங்கள். அதுதான் பாரெக்ஸ்—குழந்தையின் மென்மையான ஜீரண சக்திக்கு ஏற்ற சரியான புரதச் சத்து அடங்கியது.
இந்தக் கூப்பனுடன் 25 பைசா தபால் தலை இணைத்து, டிபார்ட்மென்ட் கே-1, த.பெ. 16558, பம்பாய்-18 WB என்னும் முகவரிக்கு இன்றே அனுப்பவும். (எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

- - - - - - - - - - - - - - - - - - - - ✂ - -

உங்கள் பெயர் ______________________________
(கொட்டை எழுத்துக்களில்)

முகவரி ______________________________
(கொட்டை எழுத்துக்களில்)

______________________________

குழந்தையின் வயது ______________ மொழி ______________ K-1

CMGF-10-203 TM

# அருமையான சுவை என்பது ஒரு விஷயம் சக்திமிக்க போஷாக்கு



## என்பது மற்றொரு முக்கியமான விஷயம்

சுத்தப் போஷாக்கைப் பெறுவதற்குத் தான் எவ்வளவு கரகரப்பான சுவை மிக்க வழி! பார்லே க்ளுகோ பிஸ்கெட்டுகளில் பால், கோதுமை மற்றும் சர்க்கரையின் நல்ல அம்சங்கள் எல்லாம் நிரம்பியுள்ளன— புரதங்களும் வைட்டமின்களும் அபரிமிதமாக அடங்கியுள்ளன.




எனவே

**பார்லே க்ளுகோ**
பிஸ்கெட்டுகள்

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கெட்டுகள்

குழந்தைகளுக்கு விசேஷமாக சிறந்து விளங்குவதில் வியப்பில்லை

everest/900e/PP tm

# எங்கள் ஊழியர் தங்கள் வசதிகளைப் பெருக்கிக் கொள்ள நாங்கள் உதவுகிறோம்



எங்கள் ஊழியர்களுக்கு ஏராளமான வசதிகள் கிடைக்கச் செய்வதே எங்கள் நோக்கம். எனவே பத்திரமான வேலையோடு அவர்கள் நல்வாழ்வுக்கான எல்லா வசதிகளையும் பெற்று மகிழ்கிறார்கள்.

அது மட்டுமல்ல.

ஊழியர்களின் முன்னேற்றத்துக்காக அவசியத்தை நாங்கள் நன்குணர்ந்து அவர்களுக்கு வேலை உயர்வுக்கான வாய்ப்புகளை அளிக்கிறோம்.

பாரபட்சமின்றி பதவி உயர்வு அளிக்க தகுதிப் பரீட்சைகள் நடத்துகிறோம். அதற்காக ஜம்ஷெட்பூரில் உள்ள எங்கள் தொழில்நுட்பப் பயிற்சி நிலையத்தில் இலவச பயிற்சி அளிக்கிறோம். இதுவரை 10,000 பேர் இவ்வாறு பயிற்சி பெற்றுள்ளனர்.

**எங்கள் பலம், எங்களுடைய உருக்கில் இருப்பதைப் போலவே, எங்கள் ஊழியரிடமும் இருக்கிறது.**

**டாடா ஸ்டீல்**

# ராமு ஒரு மகிழ்ச்சியான விவசாயி

போன விளைச்சலில் கிடைத்த பணத்தில் அவர் **இந்தியன் பாங்கில்** ஒரு கணக்கை ஆரம்பித்தார்.

இந்தியன் பாங்கு அவருக்கு சிறந்த உரங்கள், விதைகள், கருவிகள் வாங்க கடனளித்து உதவியது. இன்று ராமு நவீன கருவிகளைக் கொண்டு விவசாயம் செய்யும் ஒரு வளம் பெற்ற விவசாயி. அவர் இன்று உண்மையாகவே ஒரு மகிழ்ச்சியான மனிதர்.

நீங்களும் ராமுவைப்போல் ஆகலாம். அருகாமையிலுள்ள **இந்தியன் பாங்கில்** இன்றே ஒரு கணக்கை ஆரம்பியுங்கள்.

***இந்தியாவில் 284 கிளைகளை உடையது***



# இந்தியன் பாங்க்

(இந்திய அரசாங்கத்திற்கு முழுவதும் உடமை)

**தலைமை அலுவலகம்:**
**17, வடக்கு கடற்கரைச்சாலை,**
**சென்னை-1.**

**இந்தியன் பாங்கில் சேமித்து அதிக பயனடையுங்கள்.**

NAS-180 TM

# கல்கி

சாதாரண, மாசி 30 | பொருளடக்கம் | மார்ச் 14, 1971






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப்பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம்: | ஒருவருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20-00 | ரூ. 10-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | ரூ. 21-00 | ரூ. 10-50 |
| இதர நாடுகள் | ரூ. 40-00 | ரூ. 20-00 |

# கொஞ்சுமிளம் தென்றலோ, குலவ வரும் மல்லிகையோ!

கம கமக்கும் மல்லிகை மணம். இளமை கொழிக்கும் மேனியெழில். இரண்டையும் உங்களுக்கு வழங்கவே ஜேய் அழகு சோப். வில்லை கரைந்தாலும் சுகந்தம் குறையாத அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. உங்கள் பைந்தளிர் மேனி என்றும் பதினாறாகப் புதுமையுடன் பொலிய உபயோகியுங்கள் ஜேய்—ஜீகினுத் தாளுறை தரித்த ஒரே அழகு சோப்!




**உங்கள் புத்தெழில் பெருக ஜேய் அழகு சோப் மனங்கவர் மல்லிகை மணம் கமழ்வது.**

**டாடா** தயாரிப்பு.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்



மலர் 30



இதழ் 33

# அச்சம் அழியட்டும்

இவ்விதழ் வெளியாகும்போது, தேசத்தின் தலைவிதியையே நிர்ணயிக்கும் தேர்தல் முடிவுகள் வெளியாகிக் கொண்டிருக்கும்.

யார் ஆட்சி புரிந்தாலும் சரி, எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும் சரி — ஆளப் போகிறவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய சில அடிப்படைத் தர்மங்கள் இருப்பது போலவே, ஆளப்படும் மக்கள் கடைப் பிடிக்க வேண்டிய ஆதாரமான சில ஒழுக்கங்களும் உள்ளன.

சகல பிரஜைகளும் சட்டத்துக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டியது அவசியம். ஜனநாயக சுதந்திர நாடாகிய பாரதத்தில் எல்லோருக்கும் அபிப்பிராய சுதந்திரம் உண்டு. எனவே ஒரு தேர்தலில் இன்னார் இன்னவிதமாக வோட்டுச் செய்திருக்கக் கூடும் என்பதைக் கொண்டு அவர்களிடம் மற்றவர்கள் துவேஷம் கொள்வது ஜனநாயக மரபுக்கே முற்றிலும் முரணானது. மனத்தில் துவேஷம் கொள்வதோடு நில்லாமல், அதைக் காரியத்திலும் காட்டி வன்முறையில் இறங்குவதோ நமது தேசத்துக்கே தலைகுனிவு ஏற்படுத்தும் வெட்கக்கேடான செயலாகும்.

துரதிருஷ்டவசமாக, தேர்தல் முடிவுகள் வெளியாகு முன்பே இம்முறை நாட்டில் பல இடங்களில் வன்முறைகள் தலைதூக்கியுள்ளன. அமைதிக்கும் கௌரவத்துக்கும் பெயரெடுத்த தெய்வத் தமிழகத்தில் இந்த நீசத்தனம் கிளர்ந்தெழுந்திருப்பது சகிக்கவொண்ணாததாகும். தேர்தல் முடிவுகள் வெளியாகு முன், வெறும் அநுமானத்தின் மீதே இவ்வித வன் செயல்களில் இறங்குபவர்கள், முடிவுகள் வெளியாகும் போதும் அதன் பின்னரும் என்னென்ன விபரீதங்களைச் செய்வார்களோ என்று பரவலாக அச்சம் எழுந்துள்ளது. எல்லா கட்சித் தலைவர்களும் வன்முறையை வன்மையாகக் கண்டித்துள்ளனர். போலீஸாரும் உன்னிப்புடனும் எச்சரிக்கையுடனும் நிலைமையைச் சமாளிக்க ஆயத்தமாகியுள்ளனர். எனவே அமைதி நிலைக்குப் பங்கம் ஏற்படாது என்றே நம்பலாம்.

அராஜகச் செயல்களில் ஈடுபடுபவர்கள் அறிவுத் தெளிவு பெறுவது எவ்வளவு அவசியமோ, அதேபோல் 'அச்சம் கொள்ளக் கூடியவர்கள்' என்ற நிலையிலேயே உள்ளவர்களும் அறிவுத் தெளிவு பெறுவது அவசியமாகும். 'அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமென்பதில்லையே' என்று பாடிய கவிஞனின் நாட்டில் யாரும் அஞ்சி, அஞ்சிச் சாகவேண்டியதில்லை. மொத்தத்தில் மக்களில் மிகப் பெரும்பாலோர் சட்டத்துக்குக் கட்டுப்பட்டு நடப்பவர் தாம். வன்முறைகளில் இறங்குவோர் வெகு சிலரே. இந்தச் சிலரால் ஏற்படக் கூடிய அபாயத்தை மற்றவர்கள் பெரிது படுத்திப் பயப்படத் தேவையில்லை. பொதுவாக வன்முறைச் செயல்களில் ஈடுபடுபவர்கள் கோழைகளாகத்தான் இருப்பார்கள். நம்முடைய மனத் துணிவும், தீரமுமே எதிராளியை வன்முறையிலிருந்து தடுத்து நிறுத்தும். போலீஸார் தருகிற காப்பு பிற்பாடு இருக்கட்டும்; சமுதாயத்தின் எந்தப் பிரிவினரும் பயங்கொள்ளிகள் இல்லை என்று ஏற்பட்டுவிட்டால் எவரும் வன்முறையில் இறங்கத் துணியமாட்டார்கள்.

பீதி என்பது பொல்லாத தொற்று நோய். அச்சப் பேய்க்கு ஆளானவர்கள் அதைப் பிறருக்கும் 'தொற்ற' வைத்தால் இந்த மகத்தான ஜனநாயகமே அவலமாகி விடும்; 'தடி எடுத்தவன் தண்டல்காரன்' என்ற நிலைக்கு நாமே தாம்பூலம் வைத்து வரவேற்பு தந்ததாகும். இந்தத் தேர்தலிலிருந்து நாம் பெறும் ஓர் எதிர்பாராத நற்பலனைத் தீரம் கொள்வோம். அச்சம் தவிர்ப்போம். இறைவனை நம்பி, தர்மத்தை நம்பித் தைரியமாக இருப்போம். இறைவன் கைகொடுப்பான்; தர்மம் கை கொடுக்கும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

வன்முறை, ஒழுங்கீனம் ஆகியன கண்டிப்பான முறையில் தடுக்கப்படும் என்று சென்னை போலீஸ் உயர் அதிகாரிகளும், தமிழக ஐ.ஜி.யும் பொது அறிவிப்புச் செய்திருப்பது மகிழ்ச்சி தரும் விஷயம். ஒருவர் குற்றம் செய்யக் கூடும் என்று முகாந்திரங்களுடன் போலீசார் நம்பும்போது, அவரை அக் குற்றமே செய்யவொட்டாமல் தடுத்துக் கைது செய்யப் போலீஸுக்கு அதிகாரம் உள்ளது. சகஜமான குற்றச் சட்டத்தின் கீழேயே இவ்விதம் தடுப்புக் காவலில் வைக்க இடம் இருக்கிறது. வன்முறையின் ஆரம்ப அறிகுறிகள் தென்பட்டபோதே இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தியிருக்க வேண்டும். ஆயினும் நடவடிக்கையே எடுக்காதிருப்பதை விடக் காலம் கடந்தேனும் நடவடிக்கை எடுத்தது லொக்கியமே.

சென்னையில் மார்ச் முதல் தேதி வாக்குப் பதிவு முடிந்து விட்டது. தோல்வி நெருங்குகிறது என்ற உணர்வு தி. மு. க.வினரை முரட்டுத்தனத்தில் கொண்டு தள்ளி யிருக்கிறது. வன்முறையும் அச்சுறுத்தலும் நிகழ்ந்ததாக ஏராளமான செய்திகள் வந்திருக்கின்றன. கூலிக்காகத் துணிந்து பயங்கரக் குற்றமும் வன்முறையும் செய்பவர்கள் ஒவ்வொரு கட்சியிலுமே கவரப்படுகிறார்கள்.

காங்கிரஸின் சரித்திரம் தி. மு. க.வின் சரித்திரத்திலிருந்து மாறுபட்டது. பழைய ஜஸ்டிஸ் கட்சியின் நேர்வாரிசுகளே தி. மு. கழகத்தினர். என் அன்புள்ள நண்பரும், அறிவு விளக்கம் பெற்றவருமான ஸ்ரீ பி. டி. ராஜன் அவர்கள் ஒருவரே இன்று ஜஸ்டிஸ் கட்சிக்குத் தனியொரு பிரதிநிதியாக இருக்கிறார். காங்கிரஸ் விடுதலைப் போராட்டம் நிகழ்த்திய காலத்தில் ஜஸ்டிஸ் கட்சியினரில் பெரும்பான்மையினர் ஜாதி உணர்ச்சியாலும் பிராமணர் அரசாங்க உத்தியோகங்களில் அதிக அளவில் அமர்ந்து விடுவார்களோ என்ற பயத்தாலும் ஆட்டுவிக்கப்பட்டவர்களாய் விளங்கினர். இதற்கு விலக்காக நல்லவர் சிலரும் அதில் இருந்தனர்.

தோல்வி நெருங்கி வருகிறது என்பதால் சில கட்சிகள் முரட்டுத்தனத்தில் இறங்கினால், அது அக்கட்சிகள் இன்னமும் ஜனநாயகத்துக்குத் தயாராகவில்லை என்பதையே நிரூபிக்கிறது. ஜனநாயகமும் வன்முறையும் ஒன்றுக்கொன்று முரணானவை. ஜனநாயகத்தைச் சார்ந்தவர்கள் வெற்றி தோல்வி இரண்டையுமே சமமாக ஏற்க வேண்டும். இதைச் செய்யத் தவறுவோர் ஜனநாயக வாழ்முறைக்குத் தகுதி பெற்றவர்களல்லர். தி. மு. க.வின் அதிகார ஸ்தானம் முடிவதற்கான நாட்களை விரல்விட்டு எண்ணிவிடலாம் எனத் தோன்றுகிறது. இதை நான் எழுதுவது மார்ச் 4ந் தேதியன்று.

★

ஜஸ்டிஸ் கட்சியின் நிலை குறித்தும், ஒத்துழையாமை இயக்கத்தில் அது ஏன் கை கொடுக்கவில்லை என்பது பற்றியும் பேராசிரியர் எம். ரத்னசுவாமி அவர்கள் அழகாக விளக்கி 'ஹிந்து'வில் எழுதியுள்ள கடிதத்தைப் படித்து மிக மகிழ்ந்தேன். அவர் கூறுவதாவது :

ஸ்ரீ ஸி. ராஜகோபாலச்சாரியார் ஜஸ்டிஸ் கட்சியை 'க்விஸ்லிங்' வகையறா (அந்நிய ஆட்சிக்கு உடந்தையாக இருந்தவர்கள் எனக் கூறியது கண்டு ஆச்சரியம் அடைந்தேன். ஜஸ்டிஸ் கட்சி தேசப்பற்று படைத்த கட்சியே ஆகும். அரசியல் சம்பிரதாயத்துக்கும் சட்டத்துக்கும் இசைந்த வகையில் பிரிட்டிஷ் ஆட்சியை அகற்றுவதே தனது கொள்கை என அது வெளியிட்டு, இந்த நோக்கத்துக்காக உழைத்து வந்தது. இந்தியர்களை இலாகாத் தலைவர்களாக நியமிக்க வேண்டும், அபிவிருத்தி இனங்களுக்கு அதிகப் பண ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்பது போன்ற பல அம்சங்களில் ஜஸ்டிஸ் கட்சியானது பிரிட்டிஷ் ஆட்சியுடன் போராட்டங்கள் நடத்தியுள்ளது. பிரிட்டிஷ் சர்க்காருடன் ஜஸ்டிஸ் கட்சி ஒத்துழைத்ததற்குக் காரணம் யாதெனில், பிரிட்டிஷ் ஆட்சி சட்டப்படி அமைந்தது என்பதும், ஜஸ்டிஸ் கட்சி புரட்சி முறையைப் பின்பற்றுமல் சட்டத்துக்கு உட்பட்டே செயல்பட்டது என்பதுமாகும்.

அவர் சொல்வது முற்றிலும் சரியே எனினும், ஜஸ்டிஸ் கட்சியிலிருந்த ஒரு பெரும் பகுதியினர் ஜாதி உணர்ச்சிகளாலேயே

## சென்னை உதவி ஷெரீப்



சென்னை உதவி ஷெரீப்பாக நியமிக்கப்பட்டுள்ள செட்டி நாட்டுக் குமார ராணி மீனு முத்தையா அம்மையாருக்கு எமது பாராட்டுக்கள். குமார ராணி, ராஜா ஸர்முத்தைய செட்டியாரின் மருமகள். காலஞ்சென்ற குமாரராஜா முத்தைய செட்டியாரின் மனைவி. சமூகப் பணியில் ஆழ்ந்த ஈடுபாடு உள்ளவர். மந்தைவெளிப்பாக்கம் பண்டங்கள் உபயோகிப்போர் கூட்டுறவுச் சங்கத்தின் சுறுசுறுப்புள்ள தலைவி. குடிசை வாழ் மக்களின் முன்னேற்றத்தில் விசேஷ அக்கறை கொண்டுள்ளவர். தமிழ் நாட்டு மாநில சமூக நல போர்டின் அங்கத்தினர். இப்படிப் பல சமூகப் பணிகளில் ஈடுபட்டுள்ள ஒருவரை உதவி ஷெரீப்ப் பதவிக்கு மிகவும் பொருத்தமானவர் என்று சிபாரிசு செய்த ஷெரீப்ப் திரு ஆர். ரத்தினம் அவர்களை மெச்ச வேண்டும். உதவி ஷெரீப்ப் பதவியை ஒரு ஸ்திரீ வகிப்பது இது மூன்றாவது தடவை. மாதர் குலத்துக்குப் பெருமை தரும் நியமனம் இது. குமார ராணி மீனு முத்தையாவின் பதவி காலம் ஒளிமிக்கதாக ஆகுக.

உந்தப்பட்டனர் என்பதைப் பேராசிரியர் ரத்னஸ்வாமி அறிவார். ஜாதி உணர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட பல வகையான வர்கள் பழைய ஜஸ்டிஸ் கட்சியில் ஒட்டிக் கொண்டிருந்தனர். இந்தப் பகுதியே பின்னர் திராவிட கழகமாகவும், தி. மு. க. வாகவும் உருவெடுத்தது.

★

மக்கள் சபையைக் கலைத்து, இடைக்காலத் தேர்தலை நடத்துவதற்கான உத்தரவைப் பிரதமரவர்கள் ராஷ்டிரபதியைக் கொண்டு வெகு அவசரமாகப் பிறப்பித்து விட்டார். இது காரணமாக நேர்மை வாய்ந்த கட்சிகளுக்கும் நேர்மையான வாக்காளர்களுக்கும் பல பிரதிகூலங்கள் ஏற்பட்டன. ஆட்சி அதிகாரம் பெற்றிருப்போருக்குப் பல அநுகூலங்கள் உண்டாயின. வாக்காளர் ஜாபிதாக்களில் ஏகத்தாறுன தவறுகள் இருக்கின்றன. பெயர்களைச் சேர்த்திருப்பதிலும் நீக்கியிருப்பதிலும் ஏற்பட்டுள்ள தவறுகளைத் திருத்துவதற்கு அவகாசமே இல்லை. மக்களுக்கு மட்டுமின்றி வாக்குச் சாவடி அதிகாரிகளுக்கும் கூடப் போதிய அறிவிப்பு இன்றிச் சம்பிரதாயங்களை மாற்றித் தேர்தல் கமிஷன் புது உத்தரவுகள் போட்டிருக்கிறது.

ஏற்கெனவே யுள்ள குழப்பங்கள் போதாவென்று இப்போது இரண்டு காங்கிரஸ் கட்சிகளுக்கும் தேர்தல் கமிஷன் புது நாமகரணம் செய்திருக்கிறது. ஸ்தாபன காங்கிரஸ், இந்திரா காங்கிரஸ் அல்லது புது காங்கிரஸ் என்ற பெயர்கள் இன்று எல்லோருக்கும் புரிகின்றன. தேர்தல் கமிஷனின் புது நாமகரணம் குழப்பத்தை அதிகமாக்கும். இந்தக் கட்சிகளின் அக்கிராசனர்களான ஸ்ரீ ஜகஜீவன் ராம், ஸ்ரீ நிஜலிங்கப்பா ஆகியோர் பெயர்களில் கட்சிகளுக்குப் பெயரிடுவது முற்றிலும் தவறாகும். புது நாமகரணத்தில் எவ்வித சௌகரியமோ அநுகூலமோ இல்லை. தேர்தல் கமிஷன் ஏன் இப்படி முடிவு செய்தது என்பதற்குக் காரணம் காண முடியவில்லை.

★

மக்கள் சபையையும் மாநிலச் சட்டசபையையும் தங்கள் சௌகரியத்தை மட்டுமே முன்னிட்டுப் பிரதமரும் முதல் அமைச்சரும் கலைத்துவிட்ட பின்னரும், அவர்கள் அப்பதவிகளுக்குரிய எல்லா அதிகாரங்களையும் அநுபவிக்கலாம் என்பதாகச் சாஸனத்துக்கு விளக்கம் கண்டிருக்கிறது ஸுப்ரீம் கோர்ட். அதாவது அவர்கள் எவருக்கும் பொறுப்புக் கூறாமலே அதிகாரத்தைச் செலுத்தலாம் என்கிறது. இந்த முடிவு சரியாக இருக்கலாம்; அல்லது தவறாகவும் இருக்கலாம். ஆயினும் சட்டசபைக்குப் பொறுப்புக் கூறாமல் பிரதமரும், முதலமைச்சரும் பணியாற்றும் கட்டத்தில் அவர்களை வெறும் 'காபந்து' ஸ்தானத்தில் இருப்பவராகவே கருதும் சம்பிரதாயத்தை உருவாக்குவதுதான் நல்லது.

பொதுத் தேர்தலுக்கு முன் மத்திய—மாநில மந்திரிசபைகள் ராஜிநாமா செய்துவிட்டு, ராஷ்டிரபதியிடமும், கவர்னர்களிடமும் ஆட்சிப் பொறுப்பைத் தரவேண்டும் என்பது என் நீண்ட காலக் கருத்து. இந்தியாவின் சூழ்நிலைக்கு இதுவே ஏற்றது. நமது தேசம் புராதனமானதுதான்; ஆனால் நமக்கு ஜனநாயகம் புதிது. எனவே ஜனநாயகம் என்ற ரீதியில் நமது நாடு குழந்தைதான். புதிய ஜனநாயகங்களில் ஆட்சியதிகாரம் என்பது பெரும் ஊழல்களுக்கு இடமளிக்கக்கூடிய சக்தியாகும். தேர்தல் சமயத்து இடைக் காலத்தில் மந்திரிசபை ஆட்சி இல்லாதிருந்தால்தான், இன்று மக்களது கண்டனத்துக்கு உள்ளாகும் பல நடவடிக்கைகளைத் தவிர்க்க முடியும்.

★

உண்மை ஜனநாயகம் நடக்க வேண்டுமானால் அவ்வப்போது மக்கள் கருத்தை அறியும் தேர்தல்கள் நடக்க வேண்டும். ஆனால் பெர்மிட் — லைசென்ஸ் என்ற தங்கச் சுரங்கம் ஆளும் கட்சிக்கு மட்டுமே இருப்பதால் இவ்விதம் தேர்தல் நடத்துவதில் பிற கட்சிகளுக்குக் கஷ்டம் ஏற்படுகிறது. இந்தத் துர்நாற்ற பெர்மிட்—லைசென்ஸ் ஆட்சி தொலைய வேண்டும். அல்லது அதன் துர்நாற்றம் குறையும் விதத்தில் பெர்மிட் விநியோகத்தைச் சர்க்கார் பொறுப்பிலிருந்து விடுவித்துக் கட்சிப் பற்றற்ற குழுவிடம் ஒப்படைக்க வேண்டும்.

# சாகாத மனிதர் அழியாத கவி



டீ.வி. சபரிராஜன்

தேசபக்தர் திரு சா. கணேசன் அவர்கள் சில நாட்களுக்கு முன் எனக்கு எழுதிய ஒரு கடிதத்தின் இறுதியில், 'குண்டலகேசி'யிலிருந்து ஒரு கவியை எழுதியிருந்தார். அக்கவியின் அமைப்பும் பொருளும் என்னை மயக்கின. அது அக்காப்பியத்தில் எங்கு வருகிறது என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினேன். ஆகவே, இரண்டொரு நாட்கள் கழித்து, சென்னையில் உள்ள ஒரு முக்கிய நூலகத்துக்குப் போனேன். அந்த நூலகத் தலைமை அதிகாரி ஓரளவு தமிழ் நன்கு தெரிந்தவர் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். ஆகவே, நேரே அவரிடம் சென்று விஷயத்தைக் கூறினேன்.

அவர் என்னை உற்று நோக்கிவிட்டு, ''குண்டலகேசியா? அதைத்தான் கடல் கொண்டு போய் விட்டதே! தேடிக் கொண்டு வரச் சொல்கிறீர்களா?'' என்றார்.

நான் சிரித்துக் கொண்டே, ''மன்னிக்கவும். 'குண்டலகேசி' யைக் கடல் கொண்டு போயிருக்கலாம். ஆனால், அதிலுள்ள பாக்கள் சில, புறத்திரட்டு முதலிய நூல்கள் மூலம் கிடைத்துள்ளன. அப்பாக்களுள் ஒன்றை மட்டும் சில மாதங்களுக்கு முன்பு பார்த்தேன்; மிகவும் அழகாயிருக்கிறது. ஆகவே மீதியையும் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்'' என்றேன்.

அவர் தமிழ்ப் பற்று மிக்கவர் என்று கூறினேன் அல்லவா? ஆகவே, சற்று வியப்புடன், ''அப்படி என்ன சிறப்பு இருக்கிறது, அதில்?'' என்றார்.

''காந்தியைப் பற்றி அதில் வருகிறது. அதுதான் சிறப்பு'' என்றேன் நான்.

திகைப்புடன், ''என்ன சொல்கிறீர்கள் நீங்கள், எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! நூற்றுக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பு இயற்றப்பட்டது 'குண்டலகேசி'. காந்தியோ நேற்று நம்மிடை இருந்தவர். அவரைப் பற்றி அதில் என்ன இருக்க முடியும்?'' என்று கேட்டார்.

''இருக்கிறது'' என்று சொல்லிவிட்டு விஷயத்தைக் கூறினேன்.

உலகில் பிறக்கும் மக்களில் ஒருசிலர், தங்கள் செயல்களால் தெய்வத் தன்மை பெற்று வாழ்நாளுக்குப் பின்பும் தெய்வமாய்க் கொண்டாடப் படுகிறார்கள். அறத்தைக் காப்பதற்காக இறைவன் புவியில் மனித உருவில் தோன்றுவதாய்ச் சொல்வதன் பொருள் இதுவே. இவ்விதம் மனித தெய்வங்களாக விளங்கிய நல்லோருள் புத்தரும் ஒருவராவார். வாழ்வின் இரகசியத்தை அறிய விரும்பிய அவர், அரச இன்பத்தைத் துறந்து, காடு சென்று கடுந் தவம் புரிந்து உண்மையைக் கண்டார். அந்தப் பேருண்மையைக் கொண்டு தாம் மட்டும் பயனடைய விரும்பவில்லை. மனித குலம் முழுவதும் உய்ய வேண்டுமென்று கருதினார். அதற்காகத் தம் திருவடி மண்ணில் தோய ஊர் ஊராகச் சென்று சத்தியத்தைக் கூறினார். ''அரசுக்காகவோ வானுலகப் பேரின்பத்துக்காகவோ நான் ஏங்கவில்லை; பிறவிப்பெருந்தளையிலிருந்து விடுதலை பெறவும் நான் ஆசைப்படவில்லை; வேதனையால் நைந்து உருகுவோருடைய துன்பங்கள் தீருவதற்காகவே நான் ஏங்குகிறேன்'' என்ற அருள் வள்ளல் அவர். இறுதிக் காலம் வரை பிறருடைய நன்மையைப் பற்றியே எண்ணிய வண்ணமாயிருந்தார். நல்லறத்தையே மக்களுக்குக் கூறி வந்தார். தமக்கென்று எதுவும் வைத்துக் கொள்ளவில்லை. இதனாலெல்லாம் புத்தரை இன்று பகவான் புத்தர் என்று நாம் கூறுகிறோம். இதே சிறப்பை ஏசுநாதரிடமும் நாம் காண்கிறோம்; நேற்று நம் கண் முன்னே வாழ்ந்த காந்தி மகானிடமும் காண்கிறோம்.

இதைக் கூறிவிட்டு, சட்டைப் பையில் கையை விட்டு அந்தக் கவி எழுதப்பட்டிருந்த ஒரு துண்டுத் தாளை அவரிடம் நீட்டினேன்—நான்கே நான்கு அடி கொண்டது. இதுதான் அந்தக் கவி:

முன், தான் பெருமைக்கண், நின்றான்;
  முடிவு எய்துகாறும்
நன்றே நினைந்தான்; குணமே மொழிந்தான்
  'தனக்கு' என்று
ஒன்றேனும் இல்லான், பிறர்க்கே
  உறுதிக்கு உழன்றான்
அன்றே இறைவன்; அவன்தான்
  சரணங்கள் அன்றே

இது 'குண்டலகேசி' யில் காப்புப் பாடலாக வருகிறது என்பதைப் பின்பு தெரிந்து கொண்டேன். இறைவனுடைய பெருமையும் இறைவன் என்று பிறரால் வணங்கத்தக்கவருடைய குண நலன்களும் இதில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன. 'குண்டலகேசி' புத்தர் பெருமானைத் தொழுது போற்றும் பௌத்த சமய நூல். ஆனால் நூலின் பெயரை மறந்துவிட்டு, இப்பாடலை மட்டும் தனியே எடுத்துக்கொண்டால், யாரோ ஒருவர் காந்தியைப் பற்றி இப்போது பாடியது போலிருக்கிறதல்லவா?

நூலகத் தலைவர் நெடுநேரம்வரை மலர்ந்த முகத்துடன் அந்தக் கவியைப் பார்த்துக் கொண்டிருந்தார். பின்பு, ''ஆம், அழகான பாடல். பொருத்தமாக இருக்கிறது. முதலில் என்னைத் திகைக்க வைத்து விட்டீர்கள், நீங்கள்!'' என்றார்.

நான் சிரித்தேன்.

அவருடைய உதவியால் மீதிப் பாடல்களையும் அன்றே நான் பெற்றேன்.



"பழமையான கரகரப்-
பான பற்பொடிகள்
உங்கள் ஈறுகளுக்கும்,
பற்களுக்கும் தீங்கு
இழைக்கக்கூடும்...!"

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களை-யும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

நவீன
பல் பராமரிப்பு முறைகளே **சிக்கனமாக**
இருக்கும்போது பழமையான
பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!

*உங்கள் குடும்பத்திற்கு*
*எகானமி சைஸ் கால்கேட்*
*பற்பொடியை இன்றே வாங்குங்கள்!*
*ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!*




...பூரணமான பல் பரா-
மரிப்பிற்கு விஞ்ஞான
முறையில்
உருவாக்கப்பட்ட
கால்கேட் டூத் ப்ரஷ்
உபயோகியுங்கள்.



# உண்மையே வெல்லும்

திருவையாறு சு.வெங்கட்ராமன்

முதல் பி.எஸ்ஸி. (புள்ளி இயல் பிரிவு)
சென்னை கிறித்துவக் கல்லூரி, தாம்பரம்.

**ரூ. 75 பெறும் இரண்டாவது பரிசுக் கட்டுரை**



உருண்டோடும் காலம், உதவாத காலம், உயிரான காலம் — இப்படிப் பலவகையான காலங்கள் நம் வாழ்வில் கலந்து நிற்கின்றன. இவ்வுலகம் ஒரு நாள் அழியும். மானிட உடலும் ஒரு நாள் அழியும். இவ்வுலகில், ஆறறிவு அரசனுக்கே நிலையான வாழ்வு இல்லை. அவன் வாழ்வை வென்றாலும் வாழ்வின் கடைசிக் கட்டமான மரணம் அவனை வென்றுவிடுகிறது. கடல் கொந்தளித்தால் நிலம் அழியும். மனம் கொந்தளிக்க மனிதன் அழிகிறான். இப்படி உலகத்தில் இலங்கும் எல்லா உயிர், உயிரற்ற வகையின உறுதியில்லா நிலையில் இலங்குகின்றன. ஏன், மனிதனோடு போட்டியிடும் காலமே அழியக் கூடியதுதானே! நேற்று சென்றபொழுது, இன்றோ, நாளையோ திரும்பப்போவதில்லையே! ஆனால், நம்மிடையே நிலை பெற்ற ஓர் அழியாப் பொருள் உண்டு. இந்த அரிய பொக்கிஷம் காக்க உயிர் வேண்டாம், உடல் வேண்டாம், உதிரம் வேண்டாம், உலகம் வேண்டாம், உளைச்சல் வேண்டாம். உள்ளம் வேண்டும். உள்ளத்தில் உறுதி வேண்டும். மனவடக்கம் என்ற மனையிலே மன்னனாகத் திகழும் மாணிக்கக் கருவூலம்தான் உண்மை.

உண்மைக்கு உரிமைக் குரல் எழுப்ப உரிய குரல் இல்லை. ஆனால் வலிவு இருக்கிறது. அது அன்றே கொல்லும் வலிவு அல்ல. அது நின்று கொல்லும் வலிவு. அதிலிருந்தே இது ஒரு தெய்வத் தன்மை என்று கூறி விடலாம். தெய்வமென்றும் தெய்வத் தன்மையென்றும் பிரித்துக் கூற வேண்டியதில்லை. தெய்வத் தன்மையிலேயே தெய்வத்தைத்தான் காண்கிறோம். எனவே உண்மையே தெய்வம். அதுவே தெய்வத் தன்மையும் ஆம். ஆத்திகன் வணங்கும் ஆண்டவன் உண்மைக்குக் கொடுக்கப்பட்ட உருவமே. ஆனால், நாத்திகனோ உண்மையை உருவமின்றி வழிபடுகிறான். ஆக வழிபாட்டு முறைதான் வேறுபட்டதே ஒழிய, வழிபடும் தெய்வம் ஆத்திகனுக்கும் நாத்திகனுக்கும் ஒன்றுதான். ஆகவே அனைவருக்கும் பொதுவான தெய்வம் உண்மை என்பது தெளிவு.

உண்மை என்னும் கடலை அடைய அகக் கடல் திறக்க வேண்டும்; அகந்தையும் ஆணவமும் அகல வேண்டும்; ஆடம்பரம் விலக வேண்டும். அன்பும் அறமும் அடைய வேண்டும். போலி கௌரவத்தின் போதை தெளிய வேண்டும். இதெல்லாம் நம்மிடையே இருக்குமானால் உண்மையைப் பெற்று விடலாம். இதில் நாம் அடையும் வெற்றியே 'உண்மையே வெல்லும்' என்பதற்குச் சான்றாக நிற்கும்.

வெறும் தத்துவம் பேசி, வீண் வார்த்தைகளால் நடைமுறைக்கு எளியன அல்லாதவற்றைக் கூறி இக்கட்டுரையை முடிக்க முயலவில்லை. மாணவர்களாகிய நாம் செயலுக்கு முதலிடம் கொடுப்பவர்கள். இளரத்தம் எதையும் செய்யும் ஆற்றல் மிக்கது என்ற தன்னம்பிக்கை கொண்டவர்கள். நமக்கு எதையும் தாங்கும் இதயம் உண்டு. எண்ணிச் செயலாற்றும் திண்ணம் உண்டு. எண்ணியதை நிறைவேற்றும் உறுதி உண்டு. ஆனால் நம்மை அறியாமலேயே நம்மிடையே ஒளிந்திருக்கும் இவ்வருங் குணங்கள் விரயமாக்கப்படலாமா? வைரம் கையிலிருக்க, வெறுங் கல்லுக்கு வேதனைப்படலாமா? இந்த அருங் குணங்களைச் சரியான வழியில் பயன்படுத்தினால், நாம் நம் வாழ்வில் 'உண்மையின் வெற்றி'யினை உணர்வோம்.

புராண காலங்களிலிருந்து புதுமைக் காலம் என்று புகழப்படும் இந்த நவீன காலம்வரை உண்மையின் வெற்றிக்கு உலகத்திலே பல நயமான கதைகள் நவிலப்படுகின்றன. இவற்றையெல்லாம் கட்டுக்கதை யென்று கூறிக் காட்டாற்றிலே தூக்கி எறியலாம். ஆனால், இக் கட்டுக் கதைகளில் கூறப்படும் பட்டுத் தத்துவங்களுக்குத் தங்கள் உயிரையே விட்டு வளர்த்த சத் புருஷர்கள் நாம் வளரும் காலத்திலே, நம் இரு விழிகள் முன்னே நடமாடும்போது அதனைக் கட்டுக்கதை என்று வெட்டி எறிய முடியாதே? 'உண்மைக்கு உருவம் இல்லையே? அது வந்து உன்னை உதைக்கிறதா?' என்று அறியாமையால் வினவலாம். ஆனால், அந்த உருவமில்லாத உண்மை, பல உருவங்களில் ஒளிந்திருப்பதை அறிந்து பின்னும் அந்த வினாவை எழுப்புவது அறியாமை அல்ல, அடங்காமை ஆகும். தூங்குகிறவனை எழுப்பலாம், ஆனால் தூங்குகிறவனைப் போல் நடிப்பவனை எழுப்ப முடியாது.



உண்மைக்கு உருவம் கிடையாது. ஆயின், உயிர் உண்டு. நாசி கிடையாது. நாடி உண்டு. குரல் கிடையாது. திறன் உண்டு. பார்வை கிடையாது. ஒளி உண்டு. செவி கிடையாது. ஒலி உண்டு. இது நம் கண்ணுக்குப் புரியாத புதிரும் அல்ல. இது ஓர் உருவமற்ற உருவம்.

உற்ற தோழனை விட உயிர்த் தோழன், உண்மை.



நட்புக்குத் தோழன் உண்மை. நாட்டு நடப்புக்கும் தோழன் உண்மை. பண்புக்கு அடிப்படை உண்மை. இந்தப் பாருக்கும் அடிப்படை உண்மை. இதற்குக் கோயில் இல்லை. கோடானு கோடி மனக் கோயில்கள் உண்டு. நீ அதை வெறுத்தாலும் உன்னை அற்பன் என்று உன் உறவை அறுத்து விடும் உறவு அல்ல, அதற்கும் உனக்கும் உள்ள தொடர்பு. எப்படிப் பித்துப் பிடித்துப் பெற்ற மனம் தன் புதல்வர்களைத் தன்னைக் காட்டிலும் மிகப் பாதுகாப்பாய் வளர்க்கிறதோ, அதைப் போல் தாயைக் காட்டிலும் உன் நன்மையைப் பேணுவது உண்மை.

ஔவையின் ஆத்திச்சூடியிலும் அழ. வள்ளியப்பாவின் பாடல்களிலும், ஆசிரியர் கூற, என்னவென்று அறியாமலேயே நாம் பிஞ்சு மனத்தினராய் உண்மையைப் பற்றிப் பல கருத்துக்களைப் படித்திருக்கிறோம். சில பிராயங்களைக் கடந்த பின்னர் சிந்திக்கும் ஆற்றலைப் பெறுகிறோம். ஆனால், சிந்திக்க வேண்டிய இடத்தில் சிந்திப்பதில்லை. சிந்திக்க வேண்டியவை சிந்திக்கப்படுவதில்லை. ஆகக் கண்ணிருந்தும் குருடரான கதையாய், சிந்தனை இருந்தும் நிந்தனைக்கு ஆளாகும் அப்பாவிகள் நாம்.

நமக்குக் காலம் விரிந்து கிடக்கிறது. அது முட்பாதை என்று தெரியும். ஆனால் அது விதிக்கப்பட்ட பாதை. மாற்ற முடியாத பாதை. இந்த நீண்ட பாதையைத் தனியொரு மனிதனாய் நாம் கடக்க முடியாது. நமக்கோர் உற்ற துணை வேண்டும். அது உண்மைதான்.

அந்தக் காலத்து அரிச்சந்திரன் உண்மைக்காக உழைத்துப் பின்பு உண்மை வென்ற கதையைக் கூறவா? அப்படிச் சொன்னால், 'ஆகா, அரை மணி நேரம் போனதே தெரியவில்லை. அருமையான கதை' என்று கூறிப் போய்விடுவீர்கள். நம் பருவம் சொல்லித் தெரிய வைக்கும் பருவம்தான். ஆனால் நம் பருவம் பிறர் சொல்வதற்குச் செவி கொடுத்துக் கேட்க நம்மை அனுமதிக்கும் பருவம் அல்ல. பிறவற்றைத் தாக்கும் வேலைகளில் ஈடுபடும் நம் கரங்கள் ஆக்க வேலைகளில் ஈடுபட வேண்டும் என்று ஊரெல்லாம் சொல்லித் திரிந்தால் போதாது. செயலை விட," சொல்லுக்கு முதலிடம் கொடுத்துவிட்ட நம் சமூகம் இனி சொல்லை விடச் செயலுக்கு முதலிடம் கொடுக்க வேண்டும். நம் வாழ்வென்னும் மாளிகை வார்த்தைகளால் கட்டப்பட்ட பெரும் மாளிகையாய் இருக்க வேண்டாம். உழைப்பால் கட்டப்பட்ட உறுதியான குடிசையாய் இருந்தால் போதுமானது. வாழ்க்கையென்னும் கட்டடம் உறுதியாய் இருக்க உழைப்பு என்னும் பலமான அஸ்திவாரத்தின் மேல் அமைய வேண்டும். அந்த அஸ்திவாரம் உண்மையென்னும் கற்களை அடுக்கி அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.

உண்மை என்ற ஒளி நம்மை ஒளிர வைக்கும் என்று தெரியும். ஆனால் அந்தத் தீபத்தை நம் அகத்தில் எங்ஙனம் ஏற்றி வைப்பது என்பதே பிரச்னை. உண்மையைப் பலவந்தமாக ஊட்ட முடியாது. அது நம் உணர்விலே நிறைய வேண்டும். நம் உதிரத்தில் கரைய வேண்டும். இதற்கு நம்மிடையே வாழும் பெரியோர்களை நம் வாழ்வுக்கு உதாரணமாகக் கொள்ள வேண்டும்.

'நம்மிடையே காந்தி, காந்தி என்றொரு தாத்தா இருந்தாராம். அவர் இளம் வயதிலிருந்தே உண்மைக்காக வாழ்ந்தாராம். உயிரை விட உண்மையை உயர்வாக எண்ணினாராம்....' இந்த மாதிரி காந்தியைப் பற்றியும், அவர் வாழ்வைப் பற்றியும் நம் சிறு வயது முதல் பாட்டிமார்கள் முதல் பள்ளி ஆசான்கள் வரை பலர் கூறக் கேட்டிருக்கிறோம். ஆனால், அம்மாதிரிப் பெரியோருடைய வாழ்வை நம்முள் எத்தனை பேர் ஆதாரமாகக் கொண்டிருக்கிறோம்? சற்றே சிந்தித்துப் பார்க்க வேண்டும். நான் பல மாணவர்களைப் பார்த்திருக்கிறேன். ஏன், என் சொந்தப் பள்ளி அனுபவத்திலேயே எத்தனையோ கண்டிருக்கிறேன். நான் அப்போது ஆறாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். Moral Instruction என்று நீதிக் கதைகளைக் கூறும் வகுப்பிலே ஓர் ஆசிரியர் காந்தியினுடைய வாழ்வைப் பற்றித் தொடர்ச்சியாகக் கூறி வந்தார். அவர் சிறு பிராயத்திலே செய்த தவறுகளும், பின்பு திருந்தி, அதற்காக வருந்தியதும், அதைத் தம் சுய சரிதையில் வெளிப்படையாகக் குறிப்பிட்டதும், எங்கள் உள்ளத்திலே பசுமரத்தாணி போல் பதிந்தது. அன்றே நாங்கள் ஐந்து மாணவர்கள் கூடி ஒரு முடிவு செய்தோம். இனி வாழ்வில் எப்போதும் உண்மையே கூறுவோம் என்று உறுதி செய்தோம். அப்போது நாங்கள் ஐந்து பேர்தான். ஐம்பது பேர் உள்ள வகுப்பில் ஐந்து பேர் மட்டும் சேர்ந்தது குறைவுதான். ஆனால், இம்மாதிரி நல்ல செயல்களுக்குக் கொஞ்சம் கொஞ்சமாகக் கூட்டம் சேரும். உண்மை அல்லாத செயல்களுக்கு முதலில் கூடிப் பின்பு கொஞ்சம் கொஞ்சமாக விலகி நம்மைத் தனியனாக்கி விடுவர். உண்மையைப் போற்றும் உறுதி இளம் வயதிலேயே இவ்விதம் எங்களிடம் ஊட்டப்பட்டது. அந்த உறுதியிலிருந்து





தெரிந்தோ தெரியாமலோ பலதடவை தவறியிருக்கிறோம். ஆனால் வாழ்வில் உண்மைக்கு உரிய இடம் கொடுக்க முயன்றோம். முடியாதபோது வருந்தினோம். இதிலே நாங்கள் வெற்றி பெற்று வருகிறோம். இன்னமும் இதற்காக உழைப்போம். இதனை ஏன் இங்கு குறிப்பிடுகிறேன் என்றால் பெரியோர்களுடைய வாழ்க்கை முறை நம் உள்ளத்தைத் தூண்டி விடும் ஆற்றல் உள்ள உண்மையின் வெற்றிக்குச் சான்றுகள் ஆகும்.

நம்மிலே பலர் காந்தியின் ஒளிமிக்கக் கண்களைக் காணாதவராய் இருக்கலாம். அந்த அருள் பொங்கும் மலர் முகத்தை, அன்பு பொங்கும் அதரங்களை, அந்த அதரங்கள் அசைந்து உண்டாக்கும் அறத்தின் குரல் ஒலியைக் காணாமலும் கேட்காமலும் இருக்கலாம். அவருடைய வாழ்வும், அவருடைய இலட்சியமும் நமக்குப் புத்தகத்திலே மட்டும் படித்த புதிராக இருக்கலாம். அந்த அவதார புருஷரின் அமைதியான வாழ்க்கை விந்தையாய்த் தோன்றலாம்.

ஆனால் அந்த மகானின் அன்பு வாழ்க்கையின் மற்றொரு பதிப்பாய், அன்பு காக்கும் அறம் பேணும் மகான் மூதறிஞர் ராஜாஜியின் வாழ்வினைக் கூர்ந்து கவனித்தால், உண்மையின் வெற்றி உள்ளங்கை நெல்லிக் கனியென விளங்கும். அப்பெரியாரின் அடிச்சுவட்டில் மாணவர்கள், இளந் தலைமுறைகள் தம் வாழ்வை மாற்றி அமைத்தால் அதுவே அவர்கள் வாழ்வின் வெற்றி: உண்மையின் வெற்றி. இதற்கு இன்றைய நிலையிலிருந்து கூட ஓரிரண்டு உதாரணங்கள் காட்ட முடியும். பாங்கு தேசிய மயமாக்கும் சட்டம் உயர்நீதி மன்றத்தால் நிராகரிக்கப்பட்டது நீதியின் வெற்றி. ஆனால் அது திரும்பவும் மாற்றப் பட்டது உண்மைக்கு ஏற்பட்ட தோல்வியல்ல. உண்மைக்குத் தோல்வி என்பது கிடையாது. உண்மை வெற்றி அடைவதற்கு முன்னால் உள்ள இடர்தான் இவையெல்லாம். இந்த இடரெல்லாம் ஒரு நாள் அழியும். உண்மைக்கு இறுதியான, அறுதியான வெற்றி கிடைக்கும்.

நாட்டின் இன்றைய நடப்புக்கள் நமக்கு உண்மையின் தேவையை உணர்த்தி விட்டன. உண்மைக்கும் பொய்ம்மைக்கும் தார்மீகப் போர் தொடங்கி விட்டது. நாம் உண்மையின் அவசியத்தை உணர்ந்து விட்டோம். மாணவர் உலகம் விழித்து விட்டது. உண்மைக்கு வெற்றி உறுதி.

நான் மூதறிஞரின் எல்லாப் புத்தகங்களையும் படித்தவனல்ல. காரணம் ஏழைமைதான். ஆனால் அறிவுப் பசிக்கு ஏது ஏழைமை? அதனால் ஓரிரண்டு புத்தகங்களைப் படிக்கும் வாய்ப்பினை அடைந்திருக்கிறேன். இந்தக் கட்டுரையை முடிக்கு முன் 'வள்ளுவர் வாசகம்' என்னும் புத்தகத்தில் மூதறிஞர் வாய்மையைப் பற்றிச் செந்நாப் புலவரின் கருத்தை விளக்கியுள்ளது நினைவுக்கு வருகிறது. அதைக் கூறி இக் கட்டுரையை முடிப்பது சாலப் பொருந்தும் என நினைக்கிறேன்.

**''யாமெய்யாக் கண்டவற்றுள்**
**இல்லை எனைத்தொன்றும்**
**வாய்மையின் நல்ல பிற.''**

முனிவர் சொல்கிறார்: என் அனுபவத்தில் ஊர்ஜிதப்பட்ட உண்மைகளுக்குள் மிகவும் உறுதியாக ஊர்ஜிதப்பட்ட உண்மை யாதெனின் வாய்மையின் சிறப்பு. வாய்மையாவது பொய் சொல்லாமை.

வாய்மையைக் காட்டிலும் நல்லது வேறு இல்லை என்பது அனுபவத்தில் கண்ட உண்மை என்கிறார்.

---

ஆஸ்திரேலியாவில் இந்திய சமய இலக்கியங்களுக்கும் புராண, இதிகாசங்களுக்கும் செல்வாக்கு அதிகரித்து வருகிறது. தலைநகர் கான்பெராவிலுள்ள தேசிய நூல் நிலையத்தில் இந்திய சமய, தத்துவ நூல்கள் குறிப்பிடத்தக்க அளவுக்கு இருக்கின்றன. அண்மையில் மேலும் பல இந்திய நூல்களைத் தேசிய நூல் நிலையம் சேர்த்துக் கொண்டிருக்கிறது. மஹாபாரத ஆராய்ச்சி நூல்களும், சமஸ்கிருத நூல் தொகுதிகளும் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஆஸ்திரேலியாவுக்கான இந்தியத் தூதர் திரு ஏ. எம். தாமஸ் அவற்றை ஒப்படைத்திருக்கிறார். விஷ்ணு எஸ். சுக்தாங்கரும் பூனாவிலுள்ள பண்டார்கர் கீழ்த்திசை ஆராய்ச்சி நிலையத்தைச் சேர்ந்த அறிஞர்களும் பதிப்பித்த மகாபாரத ஆராய்ச்சி நூல்களான 22 தொகுதிகள் அவற்றில் அடங்கும்.

இந்தியக் கலாசார உறவுக் கவுன்சிலின் சார்பில் வழங்கப்பட்ட அன்பளிப்பே இது. சென்ற ஜனவரி மாதம் ஆஸ்திரேலியத் தலைநகரில் கீழ்த்திசை மொழி அறிஞர்களின் 28வது மாநாடு நடைபெற்றது. இந்திய அறிஞர்கள் பலர் அதில் கலந்து கொண்டார்கள். அந்த மாநாடு முடிவடைந்த சமயத்தில்தான் நூல்கள் அன்பளிப்பாக வழங்கப்பட்டன. இந்திய ஹைகமிஷனரிடமிருந்து ஆஸ்திரேலியா தேசிய நூல் நிலைய அதிகாரி மஹாபாரத ஆராய்ச்சித் தொகுதிகளைப் பெற்றுக் கொள்வதைப் படத்தில் காணலாம். அருகில் ஸ்ரீமதி தாமஸ். -ஜே. எம். சாலி



# மோகனப் புன்னகை
# கோலினஸ் புன்னகை




மூச்சினில் மிளிரும் தூய்மை
மலரும் நாணிடும் அருமை!

K-35

தூய இன் மூச்சு! பளிச்சிடும் பற்கள்!
மோகனப் புன்னகை!
கோலினஸ்—வாழ்வுக்கு இனிமை
கூட்டி வாழ்விக்கும் பெயர்!

காலையிலும் இரவிலும் கோலினஸ் சூபர் ஒயிட்
பற்பசையால் பல் துலக்குங்கள்.

**ஆஹா...கோலினஸ்** சூபர் ஒயிட் டூத்பேஸ்ட்

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

# மோகினித் தீவு

## ஒன்பதாம் அத்தியாயம்

அமரர் கல்கி

மோகினித் தீவின் பெண்ணரசி இந்த இடத்தில் மறுபடியும் குறுக்கிட்டுக் கதையைத் தொடர்ந்தாள்: ''பாண்டிய வீரர்கள் அப்படிப் பின்வாங்கியதற்குக் காரணம், பராக்கிரம பாண்டியர் காலமாகிவிட்டார் என்ற செய்தி வந்ததுதான். அந்தச் செய்தி வருவதற்கு முன்பே புவன மோகினி தந்தையைக் கடைசி முறை தரிசிப்பதற்காக மதுரைக்கு விரைந்தோடினாள். மரணத் தறுவாயிலிருந்த பராக்கிரம பாண்டியர் தம் அருமைக் குமாரியைக் கட்டி அணைத்துக் கொண்டு ஆசி கூறினார். அவள் செய்த குற்றத்தை மன்னித்து விட்டதாகத் தெரிவித்தார். அவள் வீரப் போர் புரிந்து பாண்டிய நாட்டின் கௌரவத்தை நிலைநாட்டியதைப் பாராட்டினார். இனிமேல் யுத்தத்தை நிறுத்திவிட்டுச் சோழர்களுடன் சமாதானம் செய்து கொள்ளும்படியும் புத்திமதி சொன்னார். 'நான் இறந்துவிட்ட பிறகு சோழர்கள் போர் செய்ய மாட்டார்கள். ஓர் அபலைப் பெண்ணோடு யுத்தம் செய்யும்படி அவ்வளவு தூரம் சோழ குலம் மானம் கெட்டுப் போய் விடவில்லை. அவர்கள் போரை நிறுத்த விரும்பினால் நீ அதற்கு மாறு சொல்ல வேண்டாம்!' என்றார். கடைசியாக, உனக்குத் திருமணம் நடத்திப் பார்க்க வேண்டும் என்ற என் மனோரதம் ஈடேறவில்லை. மீனாக்ஷி அம்மனுடைய அருளினால் நீ உன் மனத்துக்குகந்த மணாளனை மணந்து இன்புற்று வாழ்வாய்!' என்று ஆசி கூறினார். இவ்விதம் ஆசி கூறிச் சிறிது நேரத்துக்கெல்லாம் பராக்கிரம பாண்டியர் தமது அருமை மகளுடைய மடியில் தலை வைத்துப் படுத்தபடி இந்த இக வாழ்வை நீத்துச் சென்றார்.

புவனமோகினி அழுதாள்; அலறினாள். கண்ணீரை அருவியாகப் பெருக்கினாள். என்னதான் அழுதாலும் இறந்தவர்கள் திரும்பி வர மாட்டார்கள் அல்லவா? தகனக் கிரியைகள் ஆனவுடனேயே பாண்டிய குமாரி மறுபடியும் போர் முனைக்குச் சென்றாள். ஆனால் முன்னைப் போல் அவளுக்கு உற்சாகம் இருக்கவில்லை. சோகத்தில் மூழ்கியிருந்த புவன மோகினியினால் பாண்டிய வீரர்களுக்கு ஊக்கம் ஊட்டவும் முடியவில்லை. 'உன் மனத்துக்குகந்த மணாளனை மணந்து கொள்' என்று தந்தை மரணத் தறுவாயில் கூறியது அவள் மனத்தில் பதிந்திருந்தது. மனத்துக்குகந்த மணாளனை மணப்பதென்றால் ஒருவரைத்தான் அவள் மணக்க முடியும். ஆனால் அவரோ தன்னை வஞ்சித்துவிட்டுத் தான் கொடுத்த முத்திரை மோதிரத்தையும் எடுத்துக் கொண்டு ஓடிப் போனவர். தான் அவரிடம் காட்டிய அன்புக்குப் பிரதியாகத் தன் ராஜ்யத்தின் மீது படையெடுத்து வந்திருப்பவர். அவரைப் பற்றி நினைப்பதில் பயன் என்ன? அடடா! அவர் உண்மையாகவே ஒரு சிற்ப மாணாக்கராக இருந்திருக்கக் கூடாதா? இருந்திருந்தால் இப்போது சோழர்களிடம், 'இந்த ராஜ்யம் எனக்கு வேண்டாம்; நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்!' என்று சொல்லி விட்டுப் போய்விடலாமே? அதிலும் தந்தை இறந்த பிறகு இந்தப் போராட்டமே வேண்டியதில்லையே? அந்த இளஞ் சிற்பியை மணந்து ஆனந்தமாக வாழ்நாளைக் கழிக்கலாமே? இப்படிப்பட்ட எண்ணங்களினால் அவளுடைய மனம் குழம்பியிருந்தது. தான் உயிர் வாழ்ந்திருக்க வேண்டும் என்ற ஆசையே அவளுக்கு இல்லாமல் போய்விட்டது. அப்படிப்பட்ட சமயம் பார்த்து, வீராதி வீரரும் சூராதி சூரருமான குமார சோழர் புவன மோகினி இருந்த இடத்துக்குத் தாமே நேரில் விஜயம் செய்து பிரமாதமான வீரப் போர் புரிந்து அவளைச் சிறைப்பிடித்து விட்டார்! பாண்டிய குமாரி சிறைப்பட்டதும் பாண்டிய சேனையும் சின்னாபின்னமடைந்து சிதறி ஓடிவிட்டது. தமிழ் நாட்டு மன்னர்களின் வீர இரங்களைப் பற்றி நீங்கள் எவ்வளவோ கேள்விப் பட்டிருப்பீர்கள். ஆனால் இந்த மாதிரி ஓர் அபலைப் பெண்ணுடன் ஒரு ராஜ குமாரன் போர் புரிந்து அவளைச் சிறைப்படுத்திய அபார

மான வீரத்தைப் பற்றி நீர் கேள்விப் பட்டதுண்டா?''

இவ்விதம் கூறிவிட்டு அந்தப் பெண்ணரசி கடைக் கண்ணால் தன் நாயகனைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் அளவில்லாக் காதல் புலப்பட்டது. ஆனால் அவளுடைய குரலில் ஏளனம் தொனித்தது.

அந்த யுவதியின் ஏளன வார்த்தைகளைக் கேட்ட அவளுடைய நாயகன் சிரித்தான். என்னைப் பார்த்து, ''பெண்களுடைய போக்கே விசித்திரமானது. அவர்களை மகிழ்விப்பது பிரம்மப் பிரயத்தனமான காரியம். நாம் நல்லது செய்தால் அவர்களுக்குக் கெடுதலாகப் படும். நம்முடைய நோக்கத்தைத் திரித்



துக் கூறுவதிலேயே அவர்களுக்கு ஒரு தனி ஆனந்தம்!'' என்று கூறி மேலும் சொன்னான்:

''சோழ ராஜகுமாரன் போர்க்களத்தில் முன்னால் வந்து நின்று பாண்டிய குமாரியைத் தோற்கடித்து அவளைச் சிறைப்பிடித்தது உண்மைதான். ஆனால் அதற்குக் காரணம் என்ன தெரியுமா?





புவனமோகினி தற்கொலை செய்து கொண்டு சாகாமல் அவள் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத்தான். புவனமோகினியின் மனத்தில் தந்தை இறந்த காரணத்தால் சோர்வு ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அந்த மனச் சோர்வை அவள் போர்க்களத்தில் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவில்லை. முன்னைக் காட்டிலும் பத்து மடங்கு வீராவேசத்தோடு போர் புரிந்தாள். கத்தியைச் சுழற்றிக் கொண்டு போர்க்களத்தில் தன்னந் தனியாக அங்குமிங்கும் ஓடினாள். பாண்டிய குமாரியை யாரும் காயப்படுத்தி விடக்கூடாதென்று சுகுமாரன் சோழ வீரர்களுக்குக் கண்டிப்பான கட்டளையிட்டிருந்தான். ஆனால் அவர்கள் அந்தக் கட்டளையை நிறைவேற்றுவது இயலாமல் போகும்படி புவனமோகினி நடந்து கொண்டாள். எப்படியாவது போர்க்களத்தில் உயிரை விட்டு விடுவது என்றும், சோழ குலத்துக்கு அழியாப் பழியை உண்டு பண்ணுவது என்றும் அவள் தீர்மானம் செய்து கொண்டிருந்ததாகக் காணப்பட்டது. 'சண்டையை நிறுத்திவிட்டுச் சமாதானமாகப் போகலாம்' என்று சொல்லி யனுப்பியதை அவள் சட்டை செய்யவில்லை. அதன் பேரில் சுகுமாரன் தானே அவளுக்கு எதிரே வந்து நிற்க வேண்டியதாயிற்று. சுகுமாரனைத் திடீரென்று பார்த்ததும் பாண்டிய குமாரியின் கையிலிருந்த கத்தி நழுவி விழுந்தது. உடனே பக்கத்திலிருந்த சோழ வீரர்கள் அவளைப் பிடித்துக் கொண்டார்கள். கயிறு கொண்டு அவளுடைய கைகளைக் கட்டிச் சுகுமாரன் எதிரில் கொண்டு போய் நிறுத்தினார்கள். சுகுமாரன் உடனே குதிரை மீதிருந்து கீழே இறங்கினான். பாண்டிய குமாரிக்கு ஆறுதலான மொழிகளைச் சொல்ல வேண்டும் என்று கருதினான். ஆனால் மனத்தில் தோன்றிய ஆறுதல் மொழிகள் வாய் வழியாக வருவதற்கு மறுத்தன. புவனமோகினியின் கோலத்தைக் கண்டு அவன் கண்களில் கண்ணீர் ததும்பியது. அவள் தந்தையை இழந்து நிராதரவான நிலையில் இருப்பதை எண்ணி அவன் உள்ளம் உருகியது. ஆனால் ஆண் மக்களை விடப் பெண் மக்கள் பொதுவாகக் கல் நெஞ்சம் படைத்தவர்கள் என்பதை அப்போது புவனமோகினி நிரூபித்தாள். சுகுமாரனை அவள் ஏறிட்டுப் பார்த்து, 'ஐயா, மதிவாணரே! செப்புச் சிலை செய்யும் வித்தையைச் சோழ மன்னனிடமிருந்து கற்றுக் கொண்டு விட்டீரா?' என்று கேட்டாள். அதற்கு மறுமொழி சொல்லச் சுகுமாரனால் முடியவில்லை. தான் அவளை ஏமாற்றி







விட்டு வந்ததற்காக அவளிடம் வணங்கி மன்னிப்புக் கேட்டுக் கொள்ள அவன் விரும்பினான். ஆனால் அத்தனை வீரர்களுக்கு மத்தியில் ஒரு பெண்ணுக்குப் பணிந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்ளச் சுகுமாரனுக்குத் தைரியம் வரவில்லை. ஆகையால் புவனமோகினியைப் பத்திரமாய்க் கொண்டு போய்த் தக்க பாதுகாப்பில் வைக்கும்படி கட்டளை பிறப்பித்து விட்டுத் தன்னுடைய தந்தையைத் தேடிப் போனான்.

உத்தம சோழர் அப்போது வெகு உற்சாகமாக இருந்தார். மதுரையின் வீதிகளில் அவரைத் தேர்க் காலில் கட்டிப் பராக்கிரம பாண்டியன் இழுத்துச் சென்றதை உத்தம சோழர் மறக்கவே இல்லை. அதற்குப் பழிக்குப் பழி வாங்குவதற்கு இப்போது சந்தர்ப்பம் கிடைத்து விட்டது என்று அவர் எண்ணிச் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார். பராக்கிரம பாண்டியன் இறந்து விட்டபடியால் அவனுக்குப் பதிலாக, அரசனுடைய மகளைப் பழி வாங்குவதற்காக அவர் பல திட்டங்கள் போட்டுக் கொண்டிருந்தார். இந்தச் சமயத்தில் சுகுமாரன் வந்து சேர்ந்தான். அவனுடைய இதயம் கொந்தளித்துக் கொண்டிருந்தது. உரலுக்கு ஒரு பக்கத்தில் இடி, மத்தளத்துக்கு இரண்டு பக்கத்திலும் இடி என்ற பழமொழி தெரியுமல்லவா? சுகுமாரன் மத்தளத்தின் நிலையில் இருந்தான். ஒரு பக்கம் அவனுடைய காதலைக் கொள்ளை கொண்ட புவன மோகினி அவனை வஞ்சகன் என்று நிந்தனை செய்தாள். இன்னொரு பக்கத்தில் அவனுடைய தந்தை ஒரே மூர்க்க ஆவேசம் கொண்டு பாண்டிய குமாரி மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள வழிகளைத் தேடிக் கொண்டிருந்தார். சுகுமாரன் அவரிடம் மெள்ள மெள்ளத் தன் மன நிலையை வெளியிட முயன்றான். முதலில் அரச தர்மத்தைத் தந்தைக்கு நினைவூட்டினான். 'புவன மோகினி பாண்டிய ராஜனின் மகள் அல்லவா? அவளை மரியாதையாக நடத்த வேண்டாமா?' என்றான். அதற்கு உத்தம சோழர், 'அவர்கள் பரம்பரைப் பாண்டியர்கள் அல்ல; நடுவில் வந்து மதுரைச் சிம்மாசனத்தைக் கவர்ந்தவர்கள். அவர்களுக்கு ராஜ குலத்துக்குரிய மரியாதை செய்யவேண்டியதில்லை' என்று கூறினார்.

பிறகு சுகுமாரன் 'பாண்டிய குமாரியின் உதவியில்லா விட்டால் நான் தங்களை விடுவித்திருக்க முடியாது. அவள் கொடுத்த முத்திரை மோதிரத்தை எடுத்துக் கொண்டுதான் சிறைக்குள்ளே நான் வர முடிந்தது. அந்த மோதிரத்தைக் காட்டித்தானே நாம் தப்பித்து வந்தோம் ?' என்றான்.

அதற்கு உத்தம சோழர், 'யுத்த முறைகள் நாலு உண்டு: சாம, தான பேத, தண்டம் என்று. நீ பேத முறையைக் கையாண்டு எதிரியை ஏமாற்றினாய். அது நியாயமான யுத்த முறைதான். அதற்காக நீ வருத்தப்பட வேண்டியதில்லை ! உலகம் தோன்றின நாள்தொட்டு அரச குலத்தினர் பகைவர்களை வெல்வதற்காகத் தந்திரோபாயங்களைக் கைக் கொண்டிருக்கின்றனர். சாணக்கியர் அர்த்தசாஸ்திரத்தில் என்ன சொல்லியிருக்கிறார் என்று உனக்குத் தெரியாதா ?' என்றார். சுகுமாரன் கடைசியாகத் தன்னுடைய உள்ளத்தின் நிலையை உள்ளபடியே வெளியிட்டான். பாண்டிய குமாரியிடம் தான் காதல் கொண்டு விட்டதையும் அவளைத் தவிர வேறு யாரையும் கலியாணம் செய்து கொள்ளத் தன் மனம் இடங்கொடாது என்பதையும் சொன்னான். இதை அவன் சொன்

னோ இல்லையோ, உத்தம சோழர் பொங்கி எழுந்தார். துர்வாச முனிவரும் விசுவாமித்திரரும் பரசுராமரும் ஒருருக் கொண்டது போலானார். 'என்ன வார்த்தை சொன்னாய்? அந்தக் கிராதகனுடைய மகள் பேரில் காதல் கொண்டாயா? என்னைத் தேர்க் காலில் கட்டி, மதுரையின் வீதிகளில் இழுத்த பாதகனின் குமாரியை மணந்து கொள்வாயா? என்னைச் சிறையில் அடைத்துச் சங்கிலி மாட்டி விலங்கினத்தைப் போலக் கட்டி வைத்திருந்த சண்டாளனுடைய மகள் சோழ சிங்காதனத்தில் வீற்றிருப்பதை நான் அநுமதிப்பேனா? ஒருநாளும் இல்லை! அப்பனைப் போலவே மகளும் சூழ்ச்சி செய்திருக்கிறாள். உன்னை வலை போட்டுப் பிடிக்கத் தந்திரம் செய்திருக்கிறாள். அதில் நீயும் வீழ்ந்து விட்டாய். புவனமோகினியை நீ கலியாணம் செய்து கொள்வதாயிருந்தால் என்னைக் கொன்று விட்டுச் செய்து கொள்! நான் உயிரோடிருக்கும் வரை அதற்குச் சம்மதியேன்! அவளைப் பற்றி இனி என்னிடம் ஒரு வார்த்தையும் பேசாதே! அவளைக் கரும் புள்ளி செம்புள்ளிக் குத்திக் கழுதை மேல் ஏற்றி வைத்து அதே மதுரை நகர் வீதிகளில் ஊர்வலம் நடத்தப் போகிறேன். அப்படிச் செய்தால் ஒழிய என் மனத்தில் உள்ள புண் ஆறாது!' என்றுஇப்படியெல்லாம் உத்தம சோழர் ஆத்திரத்தைக் கொட்டினார்.

இந்த மன நிலையில் அவருடன் பேசுவதில் பயனில்லை என்று குமாரன் தீர்மானித்தான். கொஞ்ச காலம் கழித்து அவருடைய கோபம் தணிந்த பிறகு முயற்சி செய்து பார்க்க வேண்டும். அதற்குள்ளே கோபவெறி காரணமாகப் புவனமோகினியை ஏதாவது அவமானப்படுத்தி விட்டால் என்ன செய்கிறது? அந்த நினைவையே குமாரனால் பொறுக்க முடியவில்லை. காதலும் கலியாணமும் ஒருபுறம் இருக்க, அவள் தனக்குச் செய்த உதவிக்குப் பிரதி நன்றி செலுத்த வேண்டாமா? — இவ்விதம் யோசித்ததில் கடைசியாக ஒரு வழி அவன் மனத்தில் தோன்றியது. சிறையிலிருந்து அவள் தப்பிப் போகும்படி செய்வது முதல் காரியம். நேரில் அவளிடம் போய் எதுவும் பேசுவதற்கு அவனுக்கு வெட்கமாயிருந்தது. தன்னைப் பார்த்ததும் 'செப்பு விக்கிரகம் செய்யும் வித்தையைக் கற்றுக் கொண்டீரா?' என்றுதான் மீண்டும் அவள் கேட்பாள்! அதற்கு என்ன மறுமொழி கூறுவது? அதைக் காட்டிலும் வேறொருவர் மூலம் காரியம் நடத்துவது நல்லது. எனவே, நம்பிக்கையான



புதுதில்லி ''மியூஸிக் கிளப்'' இசைத் துறையில் தேர்ச்சி பெற்றுவரும் இளம் தலைமுறையினருக்கு ஊக்கம் அளித்து வருகிறது. ஆண்டுதோறும் தியாகராஜ உற்சவம் நடத்துவதுடன் தியாகையர் கிருதிகளிலும் ஸ்வாதித் திருநாள் கிருதிகளிலும் இசைப் போட்டிகள் நடத்துகிறது. படத்தில் தியாகையர் கிருதிகள் பாடல் போட்டியில் குமாரி வி. ராதா தம்பூரா பரிசு பெறுவதைக் காணலாம்.

தாதிப் பெண் ஒருத்தியைச் குமாரன் அழைத்தான். அவளிடம் சோழநாட்டு மோதிரத்தைக் கொடுத்தான். தாதியைப் பாண்டிய குமாரியின் சிறைக்குள் சென்று அவளைப் பார்த்து, 'உன்னிடம் ஒரு சமயம் பாண்டிய ராஜாங்கத்தின் முத்திரை மோதிரத்தை வாங்கிக் கொண்டவர், இந்த மாற்று மோதிரத்தை உனக்கு அனுப்பியிருக்கிறார். அவர் அந்த மோதிரத்தை உபயோகித்தது போல் இதை நீயும் உபயோகிக்கலாம்' என்று சொல்லி விட்டு மோதிரத்தைக் கொடுத்துவிட்டு வரும்படி அனுப்பினான். தாதி சென்ற பிற்பாடு குமாரனுக்குச் சும்மா இருக்க முடியவில்லை. புவனமோகினி மோதிரத்தை வாங்கிக் கொண்டு என்ன செய்கிறாள், என்ன சொல்கிறாள் என்று தெரிந்து கொள்ள விரும்பினான். ஆகவே, தாதியின் பின்னோடு குமாரனும் சென்று ஒரு மறைவான இடத்தில் இருந்து ஒட்டுக் கேட்டான். அவன் சொன்ன மாதிரியே சொல்லித் தாதி மோதிரத்தைக் கொடுத்த போது பாண்டியகுமாரி கூறிய மறுமொழி அவனை மறுபடியும் திகைப்படையச் செய்து விட்டது...''

இவ்விதம் சொல்லி மோகினித் தீவின் சுந்தர புருஷன் கதையை நிறுத்தினான். மேலே நடந்ததைத் தெரிந்து கொள்ள என்னுடைய ஆவல் உச்ச நிலையை அடைந்தது.

(தொடரும்)




நேற்று அணிந்த புது மோஸ்தர் ஆடை இன்று ..நாகரிகம். அதுபோல் சில ஆண்டுகளுக்குமுன் நவீன நாகரிகப் பாணியில் கட்டியதாகத் தோன்றிய கட்டடம் இன்று ஏதோ பழங்காலப் பாணியாகி விடுகிறது. என்றைக்குமே ... நவீன பாணியாகத் தோன்றக்கூடிய கட்டடங்களை அமைப்பவன்தான் கட்டடக் கலை நிபுணர்களுள் மேதை.

அத்தகையவர்களுள் ஒருவர், ஃப்ராங்க் லாயிட் ரைட். அவர் அமெரிக்க சர்க்காருக்கும் பெரிய தொழில் — வியாபார நிறுவனங்களுக்கும் பலப் பல பிரசித்தி பெற்ற கட்டடங்களை அமைத்துத் தந்தார். எனினும் அவருக்கு ரொம்பவும் மகிழ்ச்சி அளித்தது, தனி மனிதர்கள் தங்கள் குடும்பத்தோடு வாழ அழகிய வீடுகளைக் கட்டித் தருவதுதான். சென்ற நூற்றாண்டின் இறுதிக் கட்டத்தில், இந்நூற்றாண்டின் ஆரம்ப நாட்களில் அவர் அமைத்த சில வீடுகள் இன்றைக்கும் மிக நவீனமாகத் தோன்றுகின்றன. எதிர்காலத்திலும் இந்நிலை மாறப் போவதில்லை. காலத்தை வென்ற

# காலத்தை வென்ற கட்டடப் பாணி

பாணியில் இவர் அமைத்த இல்லங்களுள் ஒன்று, ''அருவி வீடு''. வீட்டைச் சூழ்நிலைக்கு ஏற்ப அமைக்கும் ரைட்டின் திறமையை இக் கட்டடத்தில் கண்கூடாகக் காணலாம். சூழ்நிலையை அவர் மாற்றுவதில்லை. மேடு பள்ளங்களைச் சமன் செய்வதோ, மரங்களை வெட்டுவதோ கிடையாது. மேடு பள்ளங்கள், மரங்கள், ஓடைகள் எல்லாவற்றையும் அப்படியே வைத்துக் கொண்டு அவற்றுக்கு இசைவாகக் கட்டடத்தை அமைத்து விடுவார். தியாகையரது பாட்டும் பாரதியாரின் கவிதையும் போல் இவரது கட்டடக் கலை பாணி நிரந்தரத்துவம் கொண்டது; காலத்தால் மெருகு குன்றாதது.

* * *

அமெரிக்கர்களைச் சந்திரனுக்கு அனுப்பும் ராக்கெட்டின் பல பகுதிகள், கென்னடி விண்வெளிக் கேந்திரத்துக்கு வந்து சேர்ந்ததும் இங்கு உள்ள ஒரு மிக உயரமான கட்டடத்தில் இணைந்து ராக்கெட்டு உருவாகும். நாலு பக்கச் சுவரும் கூரையும் கொண்ட கூடங்களுள் உலகிலேயே மிகப் பெரியது போயிங் விமான உற்பத்தி நிலையக் கட்டடம். இரண்டாவது, கேப் கென்னடியில் உள்ள ராக்கெட் உருவாக்கும் கட்டடம். இதனுள் பன்னிரண்டு கோடியே ஐம்பது லட்சம் கன அடி இடம் உள்ளது. இத்தனை இடத்தையும் ஏர்கண்டிஷன் செய்தும் இருக்கிறார்கள்! சூறாவளிக் காற்று வீசினாலும் பாதிக்கப் படாத வகையில் கட்டப்பட்டது இந்தக் கட்டடம். சிறு குண்டுகள் வெடித்தாலும் தாக்குப் பிடிக்கும். இதில் உள்ள கதவுகள் ஒவ்வொன்றும் எழுபத்துமூன்று டன் எடை! ஒரு வாசல் கதவைத் திறந்து விட்டால் அதனுள் ஐ.நா. சபைக் கட்டடமே நுழைந்து விடலாம்!

ராக்கெட்டு விண்வெளி நோக்கிக் கிளம்பும் இடம் இக்கட்டடத்திலிருந்து ஐந்து மைல் தூரத்தில் உள்ளது. ராக்கெட்டை அங்கு சுமந்து செல்லப் போகிற அசுர டிராக்டர் மீதே ராக்கெட்டை உருவாக்கி விடுவார்கள். விண்வெளி ஆராய்ச்சிகள் நடத்தும் நாஸா ஸ்தாபனம் இந்தக் கட்டடத்தை அமைத்ததற்காக 1966ல் விசேஷ விருது பெற்றது. அந்த ஆண்டில் 'ஸிவில் இன்ஜினீரிங்' துறையில் மிகப் பெரிய சாதனை இதுவே என்பதற்காகக் கிடைத்தது விருது.

* * *

உலகிலேயே மிக உயரமான கட்டடம் என்ற பெருமையைக் கடந்த நாற்பது ஆண்டுகளாகப் பெற்று வந்திருப்பது நியூயார்க்கிலுள்ள எம்பயர் ஸ்டேட் பில்டிங். ஆயின் சீக்கிரமே அது அப்பட்டத்தை இழக்குமாறு உலக வியாபாரக் கேந்திரம் செய்யப் போகிறது. (இந்த உலக வியாபாரக் கேந்திரம் பற்றிய விவரம் சென்ற இதழ் கல்வியில் ''ஏன் முடியாது?'' பகுதியில் இடம் பெற்றது.)

எம்பயர் ஸ்டேட் கட்டடம் 102 மாடிகள் கொண்டது. 1250 அடி உயரம். ஒரு கோடி செங்கற்கள் பயன்படுத்தப் பட்டன. இவற்றின் எடை 3,65,000 டன். உயரே செல்ல 1860 படிகள். பலமான காற்று வீசும் போது இக்கட்டடம் இரண்டு அங்குலம்வரை ஊசலாடும். உயரம் காரணமாக, 'லிஃப்ட்டில்' எண்பது மாடிகளைக் கடக்க ஒரு நிமிஷமாகிறது. இக்கட்டடம் உருவாகிய பின்னர் மறக்க முடியாத தினம் ஜூலை 28, 1945. அன்று விமானம் ஒன்று 79வது மாடியில் மோதியது. அப்படி மோதியதில் பதின்மூன்று பேர் உயிர் துறந்தனர். பனி மூட்டம் காரணமாக நேர்ந்தது இந்த விபத்து.






அத்தியாயம் பதினெட்டு

## ஏமாந்த யானைப் பாகன்

"சந்தர்ப்பம் என்பது கடவுளுக்கு ஒரு புனைபெயர்" என்பதாகத் தற்கால அறிஞர் ஒருவர் கூறியிருக்கிறார். கடவுள் தாம் செய்யும் காரியத்தைத் தாம் செய்தது என்று காட்டிக்கொள்ள விரும்பாதபோது சந்தர்ப்பம் என்ற புனைபெயரைச் சூட்டிக் கொள்கிறாராம்! உலக சரித்திரத்தில் மிகப் பிரசித்தி பெற்ற வீரர்கள், அரும் பெரும் காரியங்களைச் சாதித்த மகான்கள் இவர்களுடைய வரலாறுகளைப் பார்க்கும்போது சந்தர்ப்பம் இவர்களுக்கு மிக்க உதவி செய்திருக்கிறது என்பதை அறியலாம். அவர்களிடம் கடவுள் விசேஷ கருணை காட்டி அத்தகைய சந்தர்ப்பங்களை அனுப்புவதாகச் சிலர் கூறுவர். அவரவர்கள் பிறந்த வேளையின் மகிமை, ஜாதகத்தின் பலன், பிரம்மா எழுதிய எழுத்து, பூர்வஜன்ம சுகிர்தம்—என்றெல்லாம் வாழ்க்கையில் ஏற்படும் அநுகூலமான சந்தர்ப்பங்களுக்குக் காரணங்கள் கற்பிப்போரும் உண்டு.

நம் காலத்தில் காந்தி மகான் தென் ஆப்பிரிக்கா போவதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படாதிருந்திருந்தால், அவர் மனித குல சிரேஷ்டர் என்றும் அவதார புருஷர் என்றும் மக்களால் போற்றப்படும் நிலையை அடைந்திருக்க முடியுமா?

சந்திர குப்தன், விக்கிரமாதித்தன், ஜூலியஸ் ஸீஸர், நெப்போலியன், டியூக் ஆப் வில்லிங்டன், ஜார்ஜ் வாஷிங்டன், ஜோசப் ஸ்டாலின் போன்ற மகா வீரர்களின் வாழ்க்கையில் சந்தர்ப்பங்கள் எவ்வளவோ உதவி செய்திருக்கின்றன என்பதை அறிந்திருக்கிறோம்.

இதிலிருந்து ஆண்டவன் அவ்வளவு பாரபட்சமுள்ளவர் என்று முடிவு கட்டுதல் தவறாகும். சரித்திரத்தில் புகழ் பெற்ற மகான்களையும் வீரர்களையும் தவிர இன்னும் எத்தனையோ பேருக்கும் ஆண்டவன் சந்தர்ப்பங்களை அனுப்பிக் கொண்டுதான் இருக்கிறார்.

ஆனால் அந்தச் சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொள்வது மனிதனுடைய சமயோசித அறிவையும் சரியான சமயத்தில் சரியான முடிவு செய்யும் ஆற்றலையும் பொறுத்தது. சந்தர்ப்பங்களைக் கைநழுவ விடுகிறவர் கோடானு கோடிப் பேர் பெயரும் புகழும் இல்லாமல் சாதாரண வாழ்க்கை வாழ்ந்து உலகை விட்டுச் செல்கிறார்கள். சந்தர்ப்பங்களைச் சரிவரப் பயன்படுத்திக்கொள்கிறவர்கள் சரித்திரத்தில் தங்கள் பெயரை நிலைநாட்டி விட்டுச் செல்கிறார்கள்.

ஒரே நாளில் ஒரே நேரத்தில் பிறக்கிறவர்களின் வாழ்க்கைத் தரம் எவ்வளவோ வித்தியாசமாயிருப்பதற்குக் காரணம் வேறு என்ன சொல்ல முடியும்?

*   *   *

இளவரசர் அருள்மொழி வர்மரின் வாழ்க்கையில் இப்போது அத்தகைய சந்தர்ப்பம் ஒன்று நேர்ந்தது. யானை தன் அருகில் நெருங்கிய யானைப் பாக

னைத் தூக்கி எறிந்தபோது, ''யானைக்கு மதம் பிடித்து விட்டது!'' என்ற கூச்சல் கிளம்பிய போது, அந்தச் சந்தர்ப்பம் அவரை வந்தடைந்தது. அதை அவர் பயன்படுத்திக் கொள்ளாமல் விட்டிருந்தால், இந்த வரலாறு வேறு விதமாகப் போயிருக்கும். தமிழ் நாட்டின் சரித்திரத்தில் இராஜராஜ சோழர் உன்னத ஸ்தானத்துக்கு வந்திருக்கவும் முடியாது.

அதிர்ஷ்ட வசமாக அந்தச் சந்தர்ப்பத்தைத் தெரிந்து கொண்டு அதை உபயோகப்படுத்திக்கொள்ளும் சமயோசித அறிவாற்றல் அவரிடம் இருந்தது. படகோட்டி முருகையன் முதல் நாள் கூறிய வரலாற்றை நினைவுபடுத்திக் கொண்டார். யானையை நெருங்கி வந்த



வன் உண்மையான யானைப் பாகன் அல்ல, ஏதோ தீயநோக்கத்துடன் வந்தவன், அதனாலேதான் யானை அவனைத் தூக்கி எறிந்திருக்கிறது என்பதையும் ஒரு நொடியில் ஊகித்துக் கொண்டார். வந்தவன், யார், எதற்காக வந்தான் என்பதையெல்லாம் அச்சமயம் கண்டுபிடிக்க முயன்றால் கிடைத்த சந்தர்ப்பம் தவறிப் போய்விடும். ''யானைக்கு மதம் பிடித்து விட்டது!'' என்ற கூச்சலினால் மக்களிடையே உண்டான குழப்பத்தைப் பின்னர் பயன்படுத்திக் கொள்ள முடியாது. அந்த ஜனக்கூட்டத்தினிடையிலிருந்து தப்பிச் சென்று கூடியவிரைவில் தஞ்சையை அடைவது அச்சமயம் அவருடைய பிரதான நோக்கமாயிருந்தது. அந்த நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள இதைக் காட்டிலும் சரியான சந்தர்ப்பம் கிடைக்கப் போவதில்லை.

ஆதலின் முருகய்யனைத் தம் அருகில் அழைத்து, அவன் காதோடு ஏதோ சொல்லிவிட்டு,




அவன் தோள்மீது ஏறி யானையின் மீது தாவினார். அப்படித் தாவும்போதே யானையின் மேலிருந்த அம்பாரியைத் தட்டிவிட்டார். அம்பாரி கீழே விழுந்து உருண்டது. பின்னர் யானையிடத்திலும் அதன் பாஷையில் ஏதோ சொன்னார். உடனே யானை பிய்த்துக்கொண்டு கிளம்பியது. முன்போலப் பயங்கரமான குரலில் பிளிறிக் கொண்டே விரைவாக நடந்தது. சிறிது நேரத்துக் கெல்லாம் ஓடவே தொடங்கிவிட்டது.

அதே சமயத்தில் முருகய்யன், ''ஐயோ! யானைக்கு மதம் பிடித்துவிட்டது! ஓடுங்கள்! ஓடுங்கள்! உடனே ஓடுங்கள்!'' என்று பெருங் கூச்சலிட்டான்.

ஜனங்கள் முன்னைக் காட்டிலும் அதிக பீதியடைந்து நாலு புறமும் சிதறி ஓடினார்கள். அக்கம் பக்கத்திலிருந்த குறுக்கு வீதிகளிலும் சந்துகளிலும் புகுந்து ஓடினார்கள். திறந்திருந்த வீடுகளுக்குள் நுழைந்து ஒளிந்து கொண்டார்கள். வேறு எதற்கும் அஞ்சாத தீர நெஞ்சமுள்ளவர்களும் மதங் கொண்ட யானை என்றால் ஓடித்தான் ஆகவேண்டும். எப்பேர்ப்பட்ட வீராதி வீரனாலும் மதங் கொண்ட யானையை எதிர்க்கமுடியாது. ஆயுதங்களுடனே எதிர்த்து நிற்பதும் இயலாத காரியம். நிராயுதபாணிகளான ஜனங்கள், ஆண்களும், பெண்களும் முதியோர்களும் பாலர்களும் மதயானைக்கு முன்னால் சிதறி ஓடாமல், வேறு என்ன செய்ய முடியும்?

திரு ஆரூர் நகரத்தைத் தாண்டியதும், இளவரசர் யானையை நேரே தஞ்சாவூர்ச் சாலையில் செலுத்துவதற்குப் பதிலாக, வடமேற்குத் திசையை நோக்கித் திருப்பினார். முதலிலேயே அவருக்கு வழியில் பழையாறையை அடைந்து அங்கே தம் திருத் தமக்கையார் இருந்தால், அவரைப் பார்த்துப் பேசிவிட்டுத் தஞ்சை போக வேண்டும் என்ற எண்ணம் இருந்தது. இப்போது அது ஊர்ஜிதம் ஆயிற்று. மதம் பிடித்த யானை குறுக்கே விழுந்து ஓடுவதுதான் இயற்கையா யிருக்கும். தஞ்சைச் சாலையில் சென்றால் மக்கள் தம்மை விடாமல், தொடர்ந்து வரக் கூடும். வழி யில்லாத வழியில் யானை போய் விட்டால், ஜனங்கள் தொடர்ந்து வர முடியாது!

இவ்விதம் அதிவிரைவில் சிந்தித்து, முடிவு செய்து, யானையை வடமேற்குத் திசையில் குறுக்கு வழியில் செலுத்தினார். வயல்கள், வரப்புக்கள், வாய்க்கால்கள், நதிகள், அவற்றின் உடைப்புக்கள் — இவை ஒன்றையும் பொருட்படுத்தாமல் யானை ஜாம் ஜாம் என்று மனம் போன போக்கில் சென்றது. இளவரசரின் உள்ளமும் இனந் தெரியாத உற்சாகத்தை அடைந்தது. கூண்டிலிருந்து விடுதலை அடைந்த பறவையைப் போல் ஆகாச வெளியில் வட்டமிட்டுத் திரிந்தது. தம்முடைய வாழ்நாளில் ஒரு முக்கியமான கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறோம் என்னும் உள்ளுணர்ச்சியி லிருந்து உற்சாகமும் பரபரப்பும் பொங்கிக் கொண்டிருந்தன.

**யா**னை ஓடத் தொடங்கிய அதே சமயத்தில் முருகய்யனும் ''யானைக்கு மதம் பிடித்து விட்டது!'' என்று கூச்சலிட்டுக்கொண்டு ஓடினான். யானையினால் தூக்கி எறியப்பட்ட பாகன் விழுந்த இடத்தைச் சுமாராகக் குறி வைத்துக் கொண்டு சென்றான். இளவரசர் தங்கியிருந்த சோழ மாளிகைக்குச் சற்றுத் தூரத்தில் நாடெங்கும் புகழ் பெற்ற கமலாலயம் என்னும் தடாகம் இருந்தது. அந்தக் குளக்கரையின் அருகில் சென்று பார்த்தான். யானைக்குப் பயந்தவர்கள் பலர் குளக்கரையில் இறங்கி நின்றார்கள். சிலர் குளத்தில் தண்ணீரிலேயே கூட இறங்கி இருந்தார்கள். ஒரு மனிதன் தட்டுத் தடுமாறி நீந்திக் கரையேறிக் கொண்டிருந்தான். அவனை முருகய்யன் உற்றுப் பார்த்தான். முதல் நாளிரவு யானைப் பாகனையும் ராக்கம்மாளையும் அழைத்துக் கொண்டு போன மந்திரவாதிதான் அவன்! அதிர்ஷ்டக்காரன்! ஆயுள் ரொம்பக் கெட்டி! யானை தூக்கி எறிந்தும் உயிர் பிழைத்திருக்கிறான் அல்லவா? கையில் அங்குசத்துடன் சற்று முன் யானையை நோக்கி ஓடி வந்தவன் இவனேதான்...! அங்குசம் என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. அதுவும் குளத்தில் விழுந்து விட்டதா?

முருகய்யன் அவன் அருகில் சென்று, ''யானைப் பாகா! நல்லவேளை பிழைத்து எழுந்து வந்தாய்! அங்குசம் எங்கே?'' என்று கேட்டான்.

ரேவதாஸன் என்னும் கிரமவித்தன் முருகய்யனை ஏற இறங்கப் பார்த்து விட்டு, ''என்னப்பா கேட்கிறாய்? நீ யார்? நான் இப்போதுதான் குளத்தில் குளித்து விட்டுக் கரை ஏறுகிறேன்!'' என்று சொன்னான்.

''ஓகோ! அப்படியா? நீ யானைப் பாகன் இல்லையா? யானை தூக்கி எறிந்தது உன்னை அல்லவா? அப்படியானால் யானைப் பாகன் எங்கே இருக்கிறான்?'' என்று கேட்டான்.

கிரமவித்தன் மேலும் திகைப்புடன் ''நான் என்ன கண்டேன்? என்னை ஏன் கேட்கிறாய்?'' என்றான்.

''மந்திரவாதி! என்னை ஏன் ஏமாற்றப் பார்க்கிறாய்? நேற்றிரவு 'யானைப் பாகனை இடுகாட்டுக்கு அழைத்துப் போய், 'இளவரசர் ஏறும் யானைக்கு மதம் பிடிக்கும்' என்று எச்சரிக்கை செய்தாயே? அப்படியிருக்க, அந்த எச்சரிக்கையை நீயே மறந்துவிட்டு யானையிடம் அகப்பட்டுக் கொண்டாயே? அது உன் பாடு! யானைப் பாகன் எங்கே? என் மனைவி ராக்கம்மாள் எங்கே?'' என்று கேட்டான் முருகய்யன். கிரமவித்தன்



**டாக்டர் எம். எஸ்.**

சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களுக்குத் திருப்பதி வேங்கடேசுவரா சர்வகலாசாலை 'டாக்டர்' பட்டம் சூட்டியுள்ளது. பிப்ரவரி 8ந் தேதி நடந்த விருதளிப்பு விழாவில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் பங்குகொள்ள இயலாததால், பிப்ரவரி 22ந் தேதியன்று சர்வகலாசாலையில் பிரத்தியேகமாக நடைபெற்ற ஓர் எளிய இனிய விழாவில் உபஅத்யட்சகர் ஸ்ரீ டி. ஜகந்நாத ரெட்டி அவர்கள் ஸ்ரீமதி எம்.எஸ்ஸிடம் 'டாக்டர்' விருது இதழினை வெள்ளிப் பேழையில் வைத்து வழங்கினார்.

---

முகத்தில் முன்னைவிடத் திகைப்பும் பீதியும் அதிகமாயின.

''யானைப் பாகனாவது ? ராக்கம்மாளாவது? உனக்கு என்ன பைத்தியமா?'' என்று சொல்லிக் கொண்டே கிரமவித்தன் சுற்றுமுற்றும் பார்க்கலானான்.

''ஆம், ஆம்! யானைக்கு மதம் பிடித்தது போலத்தான் எனக்கும் பைத்தியம் பிடித்திருக்கிறது ! யானைப் பாகன் எங்கே என்று மட்டும் சொல்லி விடு ! இல்லாவிடில்....'' என்று முருகய்யன் சிறிது அதிகார தோரணையில் அவனிடம் பேசத் தொடங்கினான்.

சுற்று முற்றும் பார்த்துக் கொண்டிருந்த ரேவதாஸன் இப்போது முருகய்யனைப் பார்த்துப் புன்னகை புரிந்தான்.

''நீ என்னை 'மந்திரவாதி' என்கிறாய்! நீ என்னைவிடப் பெரிய மந்திரவாதியாயிருக்கிறாயே ! உனக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது! உன்னிடம் மறைப்பதில் பயனில்லை. 'யானைக்கு மதம் பிடிக்கப் போகிறது ! அதன் பேரில் ஏற வேண்டாம்' என்று இளவரசருக்கு எச்சரிக்கை செய்வதற்காகவே ஓடி வந்தேன். அதன் பலன் இப்படி ஆயிற்று. உன் மனைவியும் யானைப் பாகனும் அங்கே ஒரு வீட்டில் இருக்கிறார்கள். அவர்களை நீ பார்க்க விரும்பினால், நானே அழைத்துப் போகிறேன். இளவரசருக்கு ஒன்றும் நேரவில்லையே ? சௌக்கியமாயிருக்கிறார் அல்லவா ?'' என்றான்.

''இளவரசர் சௌக்கியம். அவர்தான் உன்னையும் யானைப் பாகனையும் அழைத்துக் கொண்டு வரும்படி எனக்குக் கட்டளையிட்டார்....''

''இளவரசரிடம் எனக்கு நல்ல பரிசு வாங்கித் தர வேண்டும்! தெரிகிறதா? பார்க்கப் போனால், அவரை நான் காப்பாற்றி விட்டது உண்மைதானே? ஆ! அதோ...!'' என்று மந்திரவாதி வியப்புடன் கூறி நிறுத்தினான்.

மந்திரவாதி உற்று நோக்கிய இடத்தில், குளத்தின் கரையோர மிருந்த

அரளிச் செடிப் புதர்களில் வேல் முனை போன்ற ஒன்று சிறிது தெரிந்தது.

''ஆ! அங்குசம்!'' என்று சொல்லிக் கொண்டே மந்திரவாதி அந்த அரளிச் செடிப் புதரை நோக்கி ஓடினான்.

முருகய்யன் அவனைவிட விரைந்து ஓடி அரளிச் செடிப் புதர்களில் புகுந்து அங்குசத்தின் அடிப்பிடியைப் பிடித்து ஜாக்கிரதையாக எடுத்துக்கொண்டான்.

பின்னர், திரும்பிப் பார்த்தான். மந்திரவாதியைக் காணவில்லை. ''அடடா! ஏமாந்து போய்விட்டோமே?'' என்ற துணுக்கத்துடன் அங்குமிங்கும் ஓடிப் பார்த்தான். பயனில்லை. குளக் கரையில் கூடியிருந்த பெரும் ஜனக் கூட்டத்தின் மத்தியில் புகுந்து மந்திரவாதி கிரமவித்தன் மாயமாய் மறைந்து விட்டான்.

மதயானை ஓடிப் போன பிறகு, ஜனங்கள் மறுபடியும் திரும்பிச் சோழ மாளிகையை நெருங்கி வந்து கொண்டிருப்பதை முருகய்யன் கண்டான்.

ஆனால் அங்கே அவன் நிற்கவில்லை.

முதல் நாள் மந்திரவாதியை அவன் பார்த்த வீடு எந்தத் திசையில் இருந்தது என்பதை நினைத்துப் பார்த்துக் கொண்டு, அதை நோக்கிச் சென்றான். வழியெல்லாம், இராஜ வீதிகளிலெல்லாம், ஜனங்கள் ஆங்காங்கு கூடிக் கூடி நின்று பேசிக் கொண்டிருந்தார்கள். மத யானை ஓடியதைப் பார்த்தவர்களில் சிலர், ''யானையின் பேரில் யாரோ ஆள் இருந்ததாகத் தோன்றியது'' என்றார்கள். மற்றும் சிலர் அதை மறுத்தார்கள். ''அது எப்படி இருக்க முடியும்? யானைப் பாகனைத் தூக்கி எறிந்த வுடனேதான் யானை ஓடத் தொடங்கி விட்டதே? அதன் பேரில் யார் ஏறியிருக்க முடியும்?'' என்றார்கள். எல்லாரும் இவ்வாறு விவாதித்துக் கொண்டே சோழ மாளிகையை நோக்கித் திரும்பிச் சென்று கொண்டிருந்தார்கள். தங்கள் இதயங் கவர்ந்த இளவரசருக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லை என்பதை உறுதிப்படுத்திக் கொள்வதற்கு ஜனங்கள் அனைவரும் ஆவலாக இருந்தார்கள்.

முருகய்யன் ஜனங்கள் வந்த திசைக்கு எதிர்த் திசையாகச் சென்று குறிப்பிட்ட சந்தை அடைந்தான். அங்கே அப்போது ஜன நடமாட்டமே இருக்கவில்லை. எல்லாரும் இராஜ வீதிகளுக்குப் போய் விட்டார்கள். இரவில் பார்த்த வீட்டைப் பகலில் அவ்வளவு சுலபமாக அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை. உற்றுப் பார்த்துக் கொண்டே முருகய்யன் போனான். ஒரு வீடு மட்டும் வெளிப்புறம் பூட்டப்பட்டிருந்தது. உள்ளேயிருந்து ஏதோ முனகல் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. அந்த வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு பாழும் வீடு இருந்தது. முருகய்யன் அந்தப் பாழும் வீட்டில் புகுந்து அடுத்த வீட்டின் மேற் கூரையில் ஏறி முற்றத்தில் குதித்தான். அவன் எதிர்பார்த்தபடியே அங்கே யானைப் பாகன் தென்பட்டான். அவன் வெறி கொண்டவனைப் போல் தோன்றினான். அவனுடைய கால்களையும் கைகளையும் கட்டியிருந்தது மல்லாமல் ஒரு தூணோடும் அவனைச் சேர்த்துக் கட்டியிருந்தது. யானைப் பாகன் தன் கைக் கட்டுகளைப் பல்லால் கடித்து அவிழ்க்கப் பெருமுயற்சி செய்துகொண்டிருந்தான். நடுநடுவில் கடிப்பதை நிறுத்தி விட்டுக் கூச்சல் போட்டுக் கொண்டுமிருந்தான்.

முருகய்யனைப் பார்த்ததும் அவன் முகத்தில் சிறிது தெளிவு ஏற்பட்டது. நாகைப்பட்டினத்திலேயே அவன் முருகய்யனைப் பார்த்திருந்தான். இளவரசருக்கு வேண்டியவன் என்பதையும் அறிந்து கொண்டிருந்தான். ஆகையால் இப்போது பரபரப்புடன், ''முருகய்யா! அவிழ்த்து விடு! அவிழ்த்துவிடு! சண்டாளர்கள் என்னை ஏமாற்றிவிட்டார்கள்! இளவரசருக்கு அபாயம் ஒன்றும் நேரவில்லையே?'' என்றான்.

முருகய்யன் கட்டுக்களை அவிழ்த்து விட்டுக் கொண்டே காலையில் நடந்த வற்றைச் சுருக்கமாகக் கூறிவிட்டு, யானைப்பாகனிடம் அவனுக்கு நேர்ந்தது என்னவென்று விசாரித்தான். யானைப் பாகனும் ஒருவாறு தட்டுத் தடுமாறிக் கூறினான். யானைக்கு மதம் பிடித்தாலும் தனக்கு ஒன்றும் நேராமல் மந்திர கவசம் தருவதாகச் சொல்லி இந்த வீட்டுக்கு அழைத்து வந்தார்கள் என்றும், இங்கே வந்ததும் சாம்பிராணிப் புகை போட்டுக் கொண்டே மந்திரவாதி மந்திரம் ஜபித்தான் என்றும், அப்போது தனக்கு மயக்கமாக வந்து தூங்கி விழுந்து விட்டதாகவும், கண் விழித்துப் பார்த்தபோது தன்னைத் தூணோடு கட்டிப் போட்டிருந்ததாகவும் கூறினான்.

இருவரும் அந்த வீட்டை விட்டு வெளியேறிச் சோழ மாளிகையை நோக்கி விரைந்து சென்றார்கள்.

அவர்கள் அம்மாளிகையை அடைந்த போது அங்கே முன்னைவிடப் பெருங் கூட்டம் கூடியிருப்பதையும் ஜனங்கள் மிக்க கவலையோடு பேசிக் கொண்டிருப்பதையும் கண்டார்கள்.

ஜனங்களின் கவலைக்குக் காரணம், இளவரசரைக் காணோம் என்பதுதான்.

அவருக்கு என்ன நேர்ந்தது என்பதைத் திட்டமாக அறிந்தவர்கள் அங்கு யாரும் இல்லை. யானை மேல் ஒருவர் இருந்ததைப் பார்த்ததாக மட்டும் சிலர் கூறினார்கள். அவர் ஒருவேளை இளவரசராக இருக்கலாம் என்று ஊகித்தார்கள்.

இளவரசர் யானைகளைப் பழக்கும் வித்தையில் மிகத்தேர்ந்தவர் என்பதும், யானைகளின் பாஷைகூட அவருக்குத் தெரியும் என்பதும் சோழ நாட்டில் பிரசித்தமாயிருந்தன. ஆகையால், மதங்கொண்ட யானையினால் ஒருவருக்கும் தீங்கு நேரிடாமல் அதன் மதத்தை அடக்கும் பொருட்டுப் பொன்னியின் செல்வர் யானை மேல் ஏறிச் சென்றிருக்க வேண்டும் என்று சிலர் தங்கள் உறுதியான நம்பிக்கையைத் தெரிவித்தார்கள்.

இச்சமயத்திலே அங்கே முருகய்யனும் யானைப் பாகனும் வந்தார்கள். யானைப் பாகனுக்கு நேற்றிரவு நேர்ந்தது அங்குள்ளவர்களுக்குத் தெரிந்த போது, அவர்களுடைய வியப்பும் திகைப்பும் பன்மடங்கு அதிகமாயின.

யானைப் பாகனைக் கட்டிப் போட்டு விட்டு, அங்குசத்தை எடுத்துக் கொண்டு ஓடி வந்தவன் சோழ குலத்தின் விரோதிகளால் அனுப்பப்பட்டவனாயிருக்க வேண்டும். ''ஒருவேளை பழுவேட்டரையர்களே அனுப்பியிருக்கக் கூடும்!'' என்று சிலர் ஊகித்துக் கூறியதைப் பெரும்பாலான மக்கள் நம்பினார்கள். அதனால் பழுவேட்டரையர்களின் மீது அவர்களுடைய கோபம் அதிகமாயிற்று. அந்தக் கோப வெறியுடனே பலர் தஞ்சையை நோக்கி உடனே கிளம்பினார்கள். யானை போன வழியை விசாரித்துக்கொண்டு ஒரு பகுதியினரும், தஞ்சாவூருக்கு நேரே போகும் சாலையில் மற்றவர்களும் கோபாவேசத்துடன் புறப்பட்டுச் சென்றார்கள்.

### அத்தியாயம் பத்தொன்பது

# திருநல்லம்

ஜோசியர் வீட்டின் ஓட்டுக் கூரையையும் அதனுடன் தன்னுடைய உயிரையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருந்த வானதி காவேரி நதியின் உடைப்பு வெள்ளத்தில் மிதந்து மிதந்து போய்க் கொண்டிருந்தாள். வெள்ளம் அவளை மேலே மேலே அழைத்துக் கொண்டு கிழக்கு நோக்கிச் சென்றது. சில சமயம் மெதுவாகச் சென்றது. சில சமயம் வேகமாக இழுத்துச் சென்றது. வேறு சிலபோது பெரிய சுழிகளிலும் சுழல்களிலும் அந்த வீட்டுக் கூரை அகப்பட்டுக் கொண்டு சுற்றிச் சுழன்று தடுமாறிக் கொண்டு சென்றது.

வெள்ளத்தின் ஆழம் அதிகமில்லாத மேட்டுப் பாங்கான இடங்களில் சில போது சென்றது. அது மரங்களின் அடியில் வெள்ளம் எவ்வளவு தூரம் ஏறியிருக்கிறது என்பதைப் பார்த்ததும், ஆங்காங்கு காவேரிக் கரை ஓரமிருந்த மண்டபங்கள் எவ்வளவு தூரம் முழுகியிருக்கின்றன என்பதைப் பார்த்ததும் தெரிந்தது. மேட்டுப்பாங்கான இடங்களில் கீழே இறங்கலாமா என்று வானதி யோசிப்பதற்குள் ஆழமான இடங்களுக்குச் சுழல்கள் இழுத்துப் போய்விட்டன.

இறங்குவதற்கும் வானதிக்கு அவ்வளவாக மனம் இல்லை. ஏனெனில், பொன்னி நதியின் அவ்வெள்ளம் அவளைப் பொன்னியின் செல்வர் இருக்குமிடத்துக்கு அழைத்துச் செல்வதாக அவளுடைய மனத்தில் ஒரு தோற்றம் ஏற்பட்டிருந்தது. இளவரசருக்கு ஏற்படப் போகும் அபாயத்தைப் பழுவேட்டரையர் மூடு மந்திரமாகக் கூறியது அவள் உள்ளத்திலும் பதிந்திருந்தது. அவரை அந்த அபாயத்திலிருந்து பாதுகாக்கவே காவேரி நதி தன்னை அழைத்துப் போவதாக அவள் எண்ணிக் கொண்டாள்.

ஆகா! அந்தப் பூங்குழலிக்குத்தான் எவ்வளவு கர்வம்? இளவரசர் விஷயத்தில் எவ்வளவு உரிமை கொண்டாடுகிறாள்? ஆயினும், அவ்வாறு உரிமை கொண்டாடுவதற்குக் காரணம் உண்டு. இன்று இளவரசர் பிழைத்திருப்பதே பூங்குழலியினால்தானே? ஒரு நாளும் இல்லை! அந்தக் குடந்தை ஜோதிடர் கூறியதைத்தான் வானதி கேட்டிருந்தாளே! இளவரசர் பிறந்த வேளை அப்படி! அவருக்கு அம்மாதிரி கண்டங்கள் பல வரக்கூடும்! ஆனால் அவர் உயிருக்கு ஒன்றும் ஆபத்து வராது! உலகத்தை ஆளப் பிறந்தவரைக் கேவலம் கடலும் புயலும் நதி வெள்ளமும் என்ன செய்துவிடும்? அவர் அவ்விதம் உயிர் தப்புவதற்கு யாரேனும் ஒரு வியாஜமாக வேண்டும்! பூங்குழலிக்கு அத்தகைய பாக்கியம் கிடைத்திருக்கிறது! அதற்காக அவள் உரிமை எப்படிக் கொண்டாடலாம்? எனினும், அம்மாதிரி பாக்கியம் தனக்கும் ஒரு தடவை கிட்டக் கூடாதா என்ற ஏக்கம் வானதியின் இதய அந்தரங்கத்தில்

நீண்ட காலமாக இருந்து கொண்டிருந்தது.

சில சமயம் கூரை சுழன்று திரும்பிய போது, பின்னால் வெகுதூரத்தில் படகு ஒன்று வருவதை வானதி பார்த்தாள். அதில் பெண் ஒருத்தியும், புருஷன் ஒருவரும் இருப்பது தெரிந்தது. யார் என்று நன்றாய்த் தெரியவில்லை. பெண் படகு செலுத்தியதைப் பார்த்ததும் அவள் ஒருவேளை பூங்குழலியாயிருக்கலாம் என்று தோன்றியது. தன்னை வெள்ளத்திலிருந்து காப்பாற்றத்தான் வருகிறாளா ? இளைய பிராட்டி அனுப்பி வைத்திருக்கிறாரா? போதும், போதும்! அவளுக்கு இளவரசர் கடமைப்பட்டிருப்பதே போதும். தானும் வேறு நன்றிக் கடன்பட வேண்டாம்! கூடவே கூடாது! தான் அவளால் இந்த வெள்ளத்திலிருந்து காப்பாற்றப்படுதலே கூடாது.

சில சமயம் படகு அவளுக்கு அருகில் நெருங்கி வந்து விட்டது போலிருந்தது. சில சமயம் கூரை வேகமாகச் சென்று படகை வெகு தூரம் பின்னால் விட்டு விட்டுச் சென்றது.

இவ்விதம் படகு கண்ணுக்கு மறைந்திருந்த ஒரு சமயத்தில், வீட்டுக் கூரை திசை திரும்பித் தெற்கு நோக்கிச் செல்லுவது போலத் தோன்றியது. இவ்வாறு வெகு தூரம் போயிற்று. காவேரியின் தென் கரையைத் தாண்டி, தெற்கே ஒரே சமுத்திரம் போலத் தோன்றிய வெள்ளப் பிரதேசத்தில் சென்றது. கடைசியில் அந்தத் தண்ணீர் வெள்ளத்தின் எல்லை கண்ணுக்குப் புலப்பட்டது. ஆகா! இது ஒரு நதியின் கரைபோல் அல்லவா காணப்படுகிறது. ஆம், ஆம். இது அரசலாற்றங் கரைதான்! காவேரி உடைப்பு வெள்ளம் நடுவில் பல பிரதேசங்களை மூழ்கடித்துக் கொண்டுவந்து இந்த ஆற்றில் விழுந்து கலந்திருக்கிறது. இதன் தென் கரை சிறிது மேடாக இருப்பதால் அதற்குள் அடங்கிச் செல்கிறது. அந்த நதிக் கரை, அதன் மரங்களடர்ந்த தோற்றம் அவளுக்குப் பழக்கப்பட்ட இடமாகத் தோன்றியது. பூர்வ ஜன்ம வாசனையைப்போல் ஞாபகம் வந்தது. இல்லை, இல்லை. இந்த ஜன்மத்தில் இரண்டு மூன்று முறை பார்த்த இடம்தான்! அவள் திருநல்லம் என்னும் க்ஷேத்திரத்தை நெருங்கி வந்துகொண்டிருக்க வேண்டும். அங்குள்ள ஆலயத்தை மழவரையர் மகளார், செம்பியன்மாதேவி, தம் அருமைக் கணவரான கண்டராதித்த சோழரின் ஞாபகமாகக் கருங்கல் திருப்பணியாகச் செய்ய ஆவல் கொண்டிருக்கிறார். அங்கே நதிக் கரையில் சோழ குலத்தார்கள் தங்குவதற்காக வசந்த மாளிகை ஒன்றும் இருக்கிறது. செம்பியன்மாதேவி ஒரு சமயம் இளைய பிராட்டியை அவ்விடத்துக்கு அழைத்துச் செல்ல, அவருடன் தானும் போனதுண்டு! அந்த வஸந்த மாளிகையையொட்டி இருந்த தோட்டங்களிலே சென்று பறவைகளின் இனிய கீதங்களைக் கேட்பதில் தனக்கு எவ்வளவு ஆர்வம் இருந்தது. ஆகா! அப்போது அங்கு நடந்த ஒரு சம்பவம், வானதியின் உள்ளத்தில் என்றும் மறக்க முடியாதபடி ஆழ்ந்து பதிந்திருந்தது.

(தொடரும்)



## குமாரி நந்தினியின் நடன அரங்கேற்றம்

சென்னை சங்கீத வித்வத் சபையின் ஆதரவில் இலங்கி வரும் பாலசரஸ்வதி பரதநாட்டியப் பள்ளியில் பரதநாட்டியம் பயின்று தேர்ச்சியடைந்துள்ள குமாரி நந்தினி ராகவனின் அரங்கேற்றம் சமீபத்தில் மயிலை ரசிக ரஞ்சனி சபை மேடையில் மிக விமரிசையாக நடைபெற்றது. பாலசரஸ்வதியே பதங்கள் பாடினார். அபூர்வ உருப்படிகள் பாடப்பட்டு அபிநயிக்கப்பட்டன. நிருத்தியப் பகுதியும், அபிநயப்பகுதியும் பாலசரஸ்வதியின் கைவண்ணம் பட்டு நன்கு பிரகாசித்தன. தலைமை வகித்த நீதிபதி கே. எஸ். வேங்கடராமனும், சங்கீத கலாநிதி முடிகொண்டான் வேங்கடராமய்யரும் குமாரி நந்தினியின் பரதக் கலையைப் பாராட்டி வாழ்த்தினர். குமாரி நந்தினி டாக்டர் வே. ராகவன் அவர்களுடைய புதல்வி; பட்டதாரியும்கூட.

அவசரமான
காலைவேளையில்
ஐந்து செகண்டு
ஒதுக்குங்கள்






புத்துயிரளிக்கும்
நெஸ்கா:பே
ஒரு கப் தயாரித்து
அருந்துங்கள் !

முற்றிலும் சுத்தமான
காப்பி—தென்னிந்திய
காப்பி விதைகளிலிருந்து
தயாரிக்கப்பட்டது




# நெஸ்கா:பே

உணர்ச்சி ஊட்டும் நெஸ்கா:பே
ஊக்கமளித்திடும் நெஸ்கா:பே !

NCE 6367

ஒரு நெஸ்லெ தயாரிப்பு




"ராக்ஷச ராஜன் ராவணன் என்கிற துஷ்டனுடைய தம்பியாகிய விபீஷணன் நான் நிற்கிறேன். தடுக்க வந்த ஜடாயுவையும் கொன்று சீதையைப் பலாத்காரமாகக் கொண்டு வந்து ராக்ஷசிகளின் காவலில் வைத்திருக்கும் ராவணனுடைய தம்பி நான். 'இந்தக் காரியம் தகாது. இவளை ராமனிடம் மறுபடியும் மரியாதையாக ஒப்புவித்துவிட்டு மன்னிப்புக் கேட்பாயாக' என்று நான் பலவாறு வற்புறுத்தியும் அவனுடைய அழியும் காலம் நெருங்கிவிட்டபடியால் நான் சொன்னதை அவன் ஒப்புக்கொள்ளவில்லை. அதற்குப் பதிலாக, சபை நடுவில் என்னை ஒரு வேலைக்கார அடிமையைக் காட்டிலும் மட்டமாகக் கருதித் திட்டி அவமானப்படுத்தினான். ஆனபடியால் இதோ வந்து நிற்கிறேன். நாடு, நகரம், மனைவி மக்கள் அனைத்தையும் துறந்து விட்டு ராகவனைச் சர



ணடைய வந்து நிற்கிறேன். இதைச் சீக்கிரம் திருமகள் கேள்வனுக்குத் தெரியப்படுத்தி என்னை அனுக்கிரகிப்பீர்களாக'' என்றான் விபீஷணன்.

உடனே சுக்ரீவன் ராமனிடம் சென்று சொன்னான்:

''ராவணனுடைய தம்பி விபீஷணன் மற்றும் நான்கு ராக்ஷசர்களுடன் வந்து தங்களைச் சரணடைய விரும்புகிறான். ஆகாயத்தில் நிற்கிறார்கள். இதைப் பற்றி நீதி சாஸ்திரம் அறிந்த தாங்கள் நன்றாக ஆராய வேண்டும். இந்த அரக்கர்கள் பல வேஷங்கள் போடுவார்கள். கண்ணுக்குத் தெரியாமல் மறைந்தும் வேலை செய்வார்கள். துஷ்டர்களுக்குரிய எல்லாச் சாமர்த்தியமும் தைரியமும் பெற்றவர்கள். இவர்களை நம்பவே கூடாது. இவர்களை ராக்ஷச ராஜனை ராவணன் அனுப்பி யிருக்கிறான் என்றே நான் எண்ணுகிறேன். நமக்குள் புகுந்து நம் ஒற்றுமையைக் கலைத்து விடுவதற்காக வந்திருக்கிறார்கள். அல்லது சமயம் பார்த்து நமக்குள் முக்கியஸ்தர்களைக் கொன்றுவிட்டுத் திரும்புவார்கள். இந்த விபீஷணன் என்ன பேசினாலும் இவன் நம்முடைய பரம சத்துருவின் சொந்தத் தம்பி என்பதை நாம் மறக்கக் கூடாது. பிறப்பில் துஷ்டப் பிறப்பான ராக்ஷச ஜென்மம். இவனை நாம் எப்படி நம்பலாம்? இது ராவணனுடைய சூழ்ச்சியே, சந்தேகமில்லை. இவனையும் இவன் துணைவர்களையும் வதம் செய்வதே நலம். இவனை நமக்குள் சேர்த்துக்கொண்டோமானால் சமயம் பார்த்து நம்மை வஞ்சிப்பான். நம்மை அழித்து விட்டுத் திரும்புவான். துஷ்டனும் தயையில்லாதவனுமான ராவணனுடைய தம்பியாகிய இந்த அரக்கனையும் இவன் கூட

வந்திருக்கும் துணையாட்களையும் உடனே வதம் செய்ய உத்தரவு தாருங்கள்.''

அரக்கனைக் கண்டு ரோஷம் மேலிட்டுச் சுக்ரீவன் இப்படித் தன் அபிப்பிராயத்தை மறைக்காமல் தெரியப்படுத்திவிட்டு ராமனுடைய உத்தரவை எதிர்பார்த்து நின்றான்.

வானர ராஜன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட ராமசந்திரன், பக்கத்தில் நின்ற ஹனுமான் முதலிய வானர சிரேஷ்டர்களைப் பார்த்து, ''நீதி சாஸ்திரம் அறிந்த அரசன் சொன்னதையெல்லாம் கேட்டீர்கள். ராவணனுடைய தம்பி வந்து நிற்கிறான். அவனைப் பற்றி உங்களுடைய அபிப்பிராயத்தைக் கேட்க விரும்புகிறேன். நெருக்கடியான சமயங்களில் நண்பர்கள் சுற்றத்தார் இவர்களுடைய யோசனை மிகவும் முக்கியம். உள்ளத்தில் தோன்றுவது போல் கூச்சமின்றிச் சொல்லுங்கள்'' என்றான்.

அவ்வாறே ஒவ்வொருவரும் தத்தம் அபிப்பிராயத்தைச் சொல்லத் தொடங்கினார்கள்.

வானர யுவராஜனான அங்கதன் சொன்னான்: ''இவன் நம் பகைவர் கூட்டத்திலிருந்து வந்திருக்கிறான். தானாக வந்தானோ பகைவனால் அனுப்பப்பட்டு வந்தானோ நமக்குத் தெரியாது. இவனைத் தள்ளி விடுவதும் நியாயமாகாது. பரீட்சை செய்யாமல் சேர்த்துக் கொள்வதும் நம்முடைய க்ஷேமத்துக்கு அபாயம் உண்டாக்கலாம். ஆனபடியால் இவனைப் பற்றித் தீர்மானமான முடிவுக்கு உடனே வர முடியாது. வர வேண்டியதுமில்லை. எப்படி நடந்து கொள்கிறானோ பார்க்கலாம். இவன் காரியங்கள் நமக்குச் சந்தேகம் உண்டாக்கினால் பிறகு தள்ளிவிடலாம். நல்ல எண்ணமே அதிகமாகக் காணப்பட்டால் சேர்த்துக் கொள்ளலாம்.''

இவ்வாறு வாலிபுத்திரன் அங்கதன் சொன்னான்.

சரபன் சொன்னான்: ''இவனை நமக்குள் உடனே சேர்த்துக் கொண்டு விட்டுப் பிறகு தீர்மானிப்பது அவ்வளவு க்ஷேமம் என்று நான் அபிப்பிராயப்படவில்லை. முதலிலேயே நமக்குள் சாமர்த்தியசாலிகளான சாரர்களை விட்டு இவனைப் பரீக்ஷை செய்துவிட்டு ஒரு முடிவுக்கு வந்துவிடுவது நலம்.''

ஜாம்பவான் சொன்னான்: ''இத்தகையவர்களைப் பரீக்ஷை செய்வதால் ஒன்றும் வெளிப்படாது. மனத்தில் உள்ள கருத்தை மறைத்துக் கொண்டு வஞ்சக எண்ணத்தோடு இவன் வந்திருந்தால் பரீக்ஷை செய்து அதைக் கண்டுபிடிப்பது முடியாத காரியம். ராவணன் நமக்குத் தீராத பகைவன். அவனை விட்டு விட்டுத் திடீரென்று வந்துவிட்டதாக இவன் சொல்லுகிறான். இதை நாம் எப்படி ஒப்புக்கொள்ள முடியும்? நாம் இன்னும் சமுத்திரம் தாண்டவில்லை. இக்கரையிலிருக்கும் போதே இவன் நம்மிடம் வந்து சரண் புகுவதற்கு என்ன காரணம்? இது ரொம்பவும் சந்தேகத்துக்கு இடம் தருகிறது. இவனுடைய கூட்டம் வஞ்சகக் கூட்டம். இவனைச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்பது என் அபிப்பிராயம்.''

மயிந்தன் சொன்னான்: ''சந்தேகத்தின் பேரிலேயே இவனைத் தள்ளிவிடலாமா ? இவனை யுக்தியாகப் பரீக்ஷை செய்தே இவனைப் பற்றித் தீர்மானிக்க வேண்டும். ராவணனைத் துறந்துவிட்டு வந்திருப்பதாகச் சொல்கிறான். இதன் உண்மையை நாம் காண முடியும். இவனுடன் சில பேர் பேசிப் பார்த்து முடிவு செய்யலாம். இதற்கு வேண்டிய சாமர்த்தியம் நம்முள் சிலருக்கு இல்லாமற் போகவில்லை.''

பிறகு ராமன் அறிவுச் செல்வமாகிய ஹனுமானைப் பார்த்தான். (தொடரும்)

## சர்வமங்களாவுக்கு ஒரு வைபவம்

[illegible] பரங்கிமலைக்கு அண்மையிலுள்ள நங்கநல்லூரில் சமீபத்தில் கும்பாபிஷேகம் கொண்ட ஸர்வ மங்களா ஸ்ரீ ராஜ ராஜேசுவரியின் மகிமை மாநிலத்தில் நாள்தோறும் பரவி வருகிறது. அப்பகுதியே அம்பாளின் ராஜதானியாகி ஸ்ரீ ராஜராஜேசுவரி நகர் எனப் பெயர் பெற்றிருக்கிறது. வருகிற ஏப்ரில் 5ந் தேதியிலிருந்து 11ந் தேதி வரை இத்திரு ஆலயத்தில் இரண்டு சத் காரியங்கள் நடக்கவிருக்கின்றன. முதலாவது, புனித சத சண்டி யாகம். இரண்டாவது, இந்த யக்ஞத்தின் அங்கமாக ஓர் அற்புதமான வித்வத் சதஸ். அம்பாளையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் ஸ்ரீ வித்யா சாக்த சமயம் குறித்துப் பேரறிஞர்கள் இந்த சதஸில் உரையாற்றுவர். சதஸில் கலந்துகொள்ள விரும்புவோர், ''மானேஜர், சர்வமங்களா ஸ்ரீ ராஜ ராஜேசுவரி தேவஸ்தானம், ஸ்ரீ ராஜராஜேச்வரி நகர், சென்னை—61'' என்ற முகவரிக்கு முன்கூட்டியே தெரிவிக்க வேண்டும். வேள்விக்கான நிதி, பண்டங்கள் முதலியனவும் மேற்படி விலாசத்துக்கே அனுப்பலாம்.

Who cares if your hair is different?

# Sunsilk cares –
## with 3 special shampoos

### Pick the one that's perfect for you

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease...gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair...revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** – more than a shampoo, a cosmetic for your hair

*ily Products by HINDUSTAN LEVER*

LINTAS-SS. 11-140


சிங்கக்
கழுகு
சிட்னி ஜோர்டான்
அப்போரினி என்னைத்
தேடிப் பார்க்கச் சீக்
கிரமே குண்டர்களை
அனுப்புவான்...


...என் ஜாகையை விட்டு
நான் கிளம்பிவிட வேண்டும்.
விமான நிலையத்தில் கார்லினுக்கு
ஒரு கடிதம் எழுதிவைத்து
இதைத் தெரிவிக்கணும்.
டான்லோ தீவை இன்று இரவு
சுற்றிப் பார்ப்பது
பலன் அளிக்கலாம்.


பன்னிரண்டு மணி
நேரத்துக்குப் பிறகு
ஒரு சிறு படகு
டான்லோ தீவு
நோக்கிச் சென்று
அரண்மனையின் பின்
புறம் கரை தட்டுகிறது.
இங்கு நான் மட்டும்
தனியாக இல்லை. ஓசைப்
படுகிறது. முன்புறம்
யாரோ காரியமாக
இருக்கிறார்கள்.
1736


விடுதியிலிருந்து
அரண்மனையின்
முன் வாசலைத்
தூரதிருஷ்டிக்
கண்ணாடி வழியே
பார்க்கிறாள்.
ஒரு விசைப்படகு.
பாரம் தூக்கி
யுடன் கூடிய ஒரு
சிறு கப்பல். ஒரு
டஜன்
ஆட்கள்...
அப்போரினி
நேரத்தை வீணாக்
காது சிங்கக்
கழுகை வசப்
படுத்திக்கொள்ள
ஆட்களை அனுப்பி
விட்டான்.


ஒருவேளை அவனே
இங்கு வந்திருப்பானோ?
கீழே இறங்கிப்
போய்ப்
பார்ப்
போம்.
1737


அந்த நெருப்பை அணைக்க எல்லோரும் ஓடுங்கள், சீக்கிரம்!


மாட்டியோ! என்ன ஆச்சு?
கூரைமேல் நெருப்பு — சின்னது தான். ஆனால் அது பரவினால் வெனிஸ் நகரப் போலீஸ் விசைப் படகுகள் இங்கே வந்துவிடுமே!


சீக்கிரம்! தந்தைமாதிர் ஊர்ந்தால் எப்படி!
1740


மாட்டியோவும் கூலியாட்களும் நெருப்பை அணைக்க உயரே போகிறார்கள்.
அல்போரினி இங்கு இல்லாதது என் அதிர்ஷ்டம்தான். மாக்ஸுக்கு ஏற்பட்டது போல் ஒரு 'விபத்து' அவனுக்கும் ஏற்பட இது நல்ல சந்தர்ப்பம், ஜூலியே.


இரு நிமிஷங்கள் கழித்துக் கப்பலில்..
ஒரே ஆசாமிதான் இதில் பாக்கி, ஆஞ்ஜெலோ, ஃப்ரான்செஸ்காவைத் தீர்த்துக்கட்ட முற்பட்ட இருவருள் ஒருவன் தான் இவன்.


மாடக்டி குறி பார்த்து இரும்பு உருளையால் தாக்க...
சும்மா ஒரு தட்டு: ரொம்ப நேரம் இவன் மயங்கிக் கிடக்கக் கூடாது.
(தொடரும்)

# வனப்பும்,புத்துணர்ச் சியும் பெற உபயோகியுங்கள்-சிந்தால்

நீங்கள் மாசுமருவற்ற எழிலைப் பெற, நாள் முழுவதும் புத்துணர்ச்- சியுடன் திகழ, உபயோகியுங்கள்- இருவகையில் நன்மை புரியும் சிந்தால் சோப். உலகிலேயே மிகச்சக்தி வாய்ந்த கிருமி நாசினியாகிய ஜி-11(ஹெக்ஸாக்ளோரோஃபீன்) அடங்கியதுசிந்தால்.

ஜி-11 அடங்கிய சிந்தால் மட்டுமே உங்களுக்கு வனப்பையும், புத்துணர்ச்சியையும் அளிக்கிறது.




**சிந்தால் உண்மையிலேயே ஒரு துர் நாற்ற மகற்றும் சோப்**

Interpub/GS/20A Tam

# காணிக்கை

## அத்தியாயம் 45

அவர்களுடைய வாழ்க்கையிலே வீசி வந்த தென்றல், புயலாக உருவெடுத்துக் கொண்டு வந்தது.

இரண்டு மாதங்களுக்குள் பாஸ்கரனிடம் இப்படி ஒரு மாறுதல் நேரும் என்று யாமினி எதிர்பார்க்கவேயில்லை. அஜிதா இல்லையென்றால் எதுவுமே இல்லை என்பது போல் அவன் நடந்து கொண்டதோடு நிற்காமல், யாமினியிடமே சொல்ல வந்ததுதான் விபரீதமாகவும் வேதனையாகவும் இருந்தது.

அந்த அஜிதா ஓரளவுக்குப் பாஸ்கரனுக்குத் தேவைப்பட்ட முதலீடுகளைச் செய்து வந்தாள் என்பது உண்மைதான். அதற்காக இப்படியா ஒருத்தி அவனை அட்டை போலப் பற்றிக் கொள்வாள்? அளவுக்கு அதிகமான சலுகைகளை அவள் பெற முயன்றதும் பெற்றுக் கொண்டு வந்ததும் யாமினிக்குப் பொறுக்கவில்லை. அஜிதா துளி செய்திருந்தாலும் அதை மலையாகப் பாஸ்கரன் எண்ணியதும் வர்ணித்ததும்கூட யாமினிக்கு எரிச்சலைக் கொடுக்கவில்லை. அதற்காக அவள் எதையோ விட்டுக் கொடுத்துத்தான் ஆகவேண்டும் என்று எதிர்பார்ப்பது போலப் பட்டதுதான் அவளுடைய ஆத்திரத்தைக் கிளறி விட்டது. இவர்கள் இருவரும் தன்னை எந்த அளவில் வைத்திருக்கிறார்கள் என்றே யாமினிக்குப் புரியவில்லை.



முதலில் எல்லாம் அவன் அஜிதாவை ஒப்புக்காகப் புகழ்வது மாதிரிப் பேசி வந்தான். ஆனால் போகப்போக அது மாறி, உண்மையாகவே கொண்டாடத் தொடங்கி விட்டான் என்று பட்டது. அஜிதா இவ்வளவு புகழ்ச்சிக்குரியவளாக எப்போது முதல் மாறினாள் என்பதே ஒரு புதிராக இருந்தது யாமினிக்கு.

எரிகிற நெருப்பில் எண்ணெயை ஊற்றுகிற கதையாக, பார்வதியம்மாளும் அவர்கள் பக்கமே பேசியதுதான் யாமினியின் நிம்மதியை அடியோடு குலைத்து விட்டது. ஆறுதலுக்கு ஒரு வார்த்தை சொல்லவோ பேச்சுக்கு ஒரு யோசனை கேட்கவோ ஆளில்லாமல் யாமினி புழுவாகத் துடித்தாள். கொண்ட கணவனிடமே எதையும் மனம் விட்டுப் பேச முடியவில்லை என்றால் அதைவிட அவனையே நம்பி வந்திருக்கும் பெண்ணுக்கு வேறு என்ன கொடுமை வேண்டும்?

ஒரு புறம் அவனுடைய புதிய தொழிற்சாலை வேகமாக வளர்ச்சி பெற்று வந்தது. மறுபுறம் யாமினியின் இல்லறமே தளர்ச்சியுற்று வந்தது. அஜிதாவும் பாஸ்கரனும் யாமினி இருப்பதையே மறந்து விட்டவர்களைப் போலத்தான் நடந்து கொண்டார்கள். யாமினியின் பிடி எப்போது தளர்ந்து அவனைக் கை நழுவிப் போக விட்டது?

யாமினி ஏமாந்து போய் அல்லது விட்டுக் கொடுத்துத்தான் அவர்களுக்குள் இத்தனை நெருக்கமான பழக்கம் ஏற்பட்டது என்ற பேச்சுக்கே இடமில்லை. பாஸ்கரனுடைய மாமா இறந்து போனது இதற்கு ஒரு நல்ல வாய்ப்பாகப் போய்விட்டது. தன்னை ஒரு பொருட்டாக மதிக்காமல் அலட்சியமாக எண்ணி நடந்து கொண்ட பாஸ்கரனைப் பழி வாங்குவது போல அஜிதா வெற்றி பெறுவதற்கு அந்தச் சமயம்தான் வசமாகக் கிடைத்தது. அவள் தன் திக்கற்ற நிலையை எத்தனை அழகாகப் பயன்படுத்திக் கொள்ள முடியுமோ அப்படிச் செய்து தன் வலிமையை அவன் உணரும்படி வைத்து விட்டாள். தன்னை அலட்சியப்படுத்துவது அவனுக்குத்தான் நஷ்டம் என்பதை அவள் மிகத் திறமையாகக் காட்டிவிட்டாள். அப்படித்தான் ஏதோ நடந்திருக்க வேண்டும் என்று யாமினி ஊகித்துக் கொண்டாள்.

நாகநாதன் இறந்த செய்தி வந்தவுடனேயே அம்மாவும் பிள்ளையும் அங்கே போய் விட்டார்கள். யாமினி வயிறும் பிள்ளையுமாக அங்கே வரவேண்டாம் என்று சொல்லிவிட்டாள் பார்வதியம்மாள். அதற்குப் பிறகும் யாமினி அங்கே போகவில்லை. அம்மாவும் பிள்ளையும்தான் போனார்கள். பல சமயங்களில் அங்கேயே அவர்களில் யாராவது ஒருவர் இருக்க வேண்டியும் வந்தது. பகல் எல்லாம் பாஸ்கரன் பெரும்பாலும் போவான். மற்ற நேரங்களில் பார்வதியம்மாள் போவாள். அஜிதா வீட்டுக்கு நினைத்த போதெல்லாம் போகிற வழக்கம் அப்போதுதான் பாஸ்கரனுக்கு வந்தது. யாமினி இன்னும் கொஞ்சம் பிடிவாதமாக இருந்திருந்தால் இன்றைக்கு இவ்வளவு தூரத்துக்கு வந்திருக்காதோ, என்னவோ! அவளுடைய போதாத காலம் சதி செய்து விட்டது. அவளுடைய பெருந்தன்மை முன் நின்று அவளைத் தடுத்து விட்டது. பாஸ்கரன் மீது அவநம்பிக்கை படுவதாவது!

அஜிதா நினைத்தபோது வீட்டுக்கே வரத் தொடங்கினாள். நினைத்த வேளைகளில் எல்லாம் அவனைத் தன் வீட்டுக்கும் கம்பெனிக்குமாக அழைத்துக் கொண்டும் போனாள். அவன் அவளோடு பல இடங்களுக்கும் போய்க் கொண்டிருந்தான். இது யாமினிக்குப் பிடிக்கத்தான் இல்லை; இருந்தாலும் இதை எப்படித் தடுத்து நிறுத்துவது?

''என்ன செய்யறது யாமினி, எனக்கும் இதெல்



லாம் பிடிக்கத்தான் இல்லே. ஆனல் வேறே வழியில்லேயே! மாமா படுக்கையில் விழுந்ததிலிருந்தே அங்கே ஒண்ணும் ஒழுங்காயில்லே. வீட்டு நிர்வாகமும் சரி, கம்பெனி விவகாரங்களும் சரி, அவளால் தனியாய் என்ன செய்ய முடியும்? அதுக்குத்தான் போக வேண்டியிருக்கு. போகாமல் போனல் அவள் வருத்தப் படருள். பரிதாபமாயிருக்கு!'' என்ருன் பாஸ்கரன்.

''அதுக்குன்னு ஒருத்தர் இருக்கிற போது இப்படிப் பரிதாபப்படும்படியா வைச்சுக்குவானேன்? அப்படியென்ன புருஷன் — பெண்டாட்டிக்குள்ளே வந்தது? என்னிக்கும் விட்டுப் போகிற விஷயமில்லேயே இது! இவள் கொஞ்சம் தணிஞ்சு போனல் என்ன மோசம்? கணவராகப்பட்டவர் வராமல் இருந்து விடுவாரோ?''

''அது யார் மேலே தப்போ, தெரியாது. முரளி அங்கே வர்றதோ, அஜிதா அங்கே போறதோ நடக்காதுன்னு நினைக்கிறேன்!''

''இதையெல்லாம் ஒழுங்கு செய்ய உங்களைக் கூப்பிடறுப்பலே அதையும் ஒழுங்கு செய்யறதுக்கு உங்களைக் கூப்பிடக் காணுமே!''

பாஸ்கரன் வாய் அடைத்துவிட்டது. அப்புறம் யாமினியிடம் அவளைப் பற்றிப் பேசவேயில்லே. அவளும் அடிக்கடி இதையே பேச வேண்டாம் என்று சும்மா இருந்தாள். அதற்கு ஓர் எல்லேயில்லேயா? ராத்திரி பதினெரு மணி வரையிலும் அவன் வீடு திரும்பவில்லே. யாமினி பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டு அஜிதாவின் வீட்டுக்குப் போன் செய்தாள்.

''நான்தான் யாமினி பேசறேன். இவர் இருக்காரா அங்கே?''

''பாஸ்கர் தானே—கூப்பிடட்டுமா?''

''கூப்பிட வேண்டாம். மணி பதினெண்ணு ஆகிறது. இன்னும் சாப்பிட வரல்லே என்கிறதையும் அவருக்காக ஒருத்தி காத்திண்டிருக்காள் என்கிறதையும் ஞாபகப்படுத்தினல் போதும்!''

''அடி பைத்தியமே, இதுக்காக நீ காத்திண்டிருப்பானேன்?''

''பைத்தியமேதான் நான். பாரேன், விஷயம் புரியாமல், எதுக்குக் காத்திண்டிருக்கிறதுன்னு தெரியாமல் உட்கார்ந்திருக்கேன்!''

''சரி, நீ எங்கிட்டே கோவிச்சுக்காதே. நான் அப்பவே சொல்லியாச்சு, பாஸ்கர்கிட்டே. மறுபடியும் சொல்லிப் பார்க்கிறேன்.''

''பார்க்க வேண்டாம்; வரச் சொன்ணுப் போதும்!''

வேகமாக ரிஸீவரை வைத்துவிட்டு, படுக்கையில் படுத்தபடி அவனுக்காகக் காத்திருந்தாள். குற்றவாளியைப்போல் வருகிற பாஸ்கரனை எதிர்பார்த்திருந்தவளுக்குக் கோபத்தோடு வந்தவனைக் கண்டதும் வியப்பாக இருந்தது.

''சாப்பிட வேண்டாமா?''

''வேண்டாம்.''

''ஏன்?''

''உன்னை யார் அவளுக்குப் போன் பண்ணச் சொன்னது? என்னை அவமானப்படுத்தணும்னு நினைப்பா உனக்கு?''

''என்ன அவமானப்படுத்திப்புட்டேன், இப்ப?''

''நான் என்ன பச்சைக் குழந்தையா, பதினெரு மணி ஆயிட்டா என்னைத் தேடணுமா? காணுமே போயிடுவேனு? இது ஒரு பெரிய நேரமா? நீ எனக்காகக் காத்திண்டிருக்கிறது அப்பத்தான் அவளுக்குத் தெரியுமா? அதையும் தவிர யார்கிட்டே என்ன சொல்றதுன்னு கிடையாதா? இதோ, இது என்னன்னு பார்த்தியா? செக்—எத்தனை ரூபாய் தெரியுமா? ஐம்பதாயிரம்! அவசரம்னு தேவையாயிருக்கிறப்போ கேட்காமலே கொடுத்தது. அப்படிப் பட்டவள்கிட்டே போய் இப்படித்தான் கன்னத்திலே அறையறுப்பலே ரிஸீவரை வைக்கிறதா? இதெல்லாம் அவமானமில்லாமே வேறே என்ன?''

''இந்தப் பணம் கொடுக்கிறதுக்காகத்தான் மூணு மணிக்கே வந்து உங்களை அவள் அழைச்சிண்டு போனளா? இதைக் கொடுக்கிறதுக்கு இத்தனை நாழியா? நீங்கதான் கேக்கல்லியே — அவள் எதுக்காக இதைக் கொடுக்கணும்?''

''நான் மூணு மணிக்குப் போனது உனக்கு ரொம்பத் தெரியுமோ?''

''எனக்கு எப்படித் தெரியும்? உங்க உதவியாளர்களிலே ஒருத்தர் சொல்லித்தான் தெரியும்!''

''என்னைச் 'செக்' பண்றியாக்கும் நீ! உன்னை யார் அங்கே போன் பண்ணச் சொன்னது?''

''யார் சொல்லணும்? எனக்கு அந்த உரிமை இல்லேயா? போன் பண்ணவும் உண்டு; செக் பண்ணவும் உண்டு. யாரோ ஒருத்தி அங்கேயே வந்து அழைச்சிண்டு போகலாமாம்; எனக்கு அங்கே போன் பண்ணக்கூட உரிமை இல்லியாக்கும்!''

''அஜிதா வந்து யாரோ ஒருத்தியா உனக்கு?''

''எனக்கு மட்டும் என்ன, உங்களுக்கும்கூட அவள் யாரோ ஒருத்திதான்; அதாவது நான் இருக்கிற வரையிலே!''

என்ன காரணத்தாலோ பாஸ்கரனின் கோபம் அதற்கு மேல் செல்லவில்லை. என்னவோ இரண்டுங்கெட்டானுக உறுமிக் கறுவிவிட்டு அடங்கிப் போனுன். அன்றைக்கு ஏற்பட்ட வாக்குவாதம் வரையில் வெற்றி அவளுக்குத்தான். என்றைக்குமே இது பற்றிப் பேச்சு வந்தால் அவள் கட்சிக்குத்தான் வலு இருக்கும். ஆகவே பேசாமலே இருந்துவிட்டால் அவள் கை ஓங்குவது எங்கே ?

அஜிதாவுக்கு வீட்டில்தான் எதிர்ப்பு என்று இல்லை. எங்குமே இப்படித்தான். அவளோடு அடிக்கடி பல இடங்களுக்குப் போவதும் வருவதும் அவனுடைய தொழிற்சாலையிலேயே யாருக்கும் பிடிக்கவில்லை; பாஸ்கரனுடைய நண்பர்கள் பலருக்கும் பிடிக்கவில்லை. வைத்தியநாதனும் தண்டபாணியும் இதை அவனிடமே நேரில் இரண்டொரு தடவை சொல்லி விட்டார்கள்.

''ஜாக்கிரதை ! அவன்மீது வழக்குப் பதிவு செய்ய முயற்சி நடக்கிறது!''

''ஏன், ஏன், எதுக்காக ?''

''அதெல்லாம் ஒண்ணும் கேட்காதே. அந்த விரிவான விவரம் எல்லாம் தெரியாது. முரளியோட நண்பன்—பெயரைக் கேட்காதே; தெரியாது—எங்க ஜி. எம்.கிட்டே சொல்லிண்டிருந்ததைக் கேட்டுட்டுச் சொல்றேன் ! முரளி பேச்சு எப்படி வந்ததோ, அதுவும் தெரியாது. ஆனுல் அவள் பேரிலே கிரிமினல் வழக்கு பதிவு செய்வதற்கு ஏற்பாடு நடக்கிறதுன்னு மட்டும் தான் தெரியும். அதனுலே சொல்றேன். இதெல்லாம் வேண்டாம். வம்பு !'' என்று வைத்தியநாதனும் சொன்னுன்; தண்டபாணியும் சொன்னுன்.

இவர்கள் ஏதோ பொறுமையால் இப்படிச் சொல்கிறுர்கள் என்று நினைத்தான் பாஸ்கரன். ராஜேஷ், மாணிக்கம் போன்றவர்கள் இதை வாயைவிட்டுச் சொல்லா விட்டாலும் காரியத்தில் தங்கள் வெறுப்பைக் காட்டிக் கொண்டார்கள். அவர்கள் அநுபவமில்லாத கற்றுக் குட்டிகள் என்று அவர்களைப் பார்த்துப் பரிதாபப்பட்டான் பாஸ்கரன். தன் தொழிற்சாலையின் இந்தத் தொடக்கக் கட்டங்களில் அஜிதா போன்ற ஒருத்தி தனக்குப் பக்கபலமாகக் கிடைத்திருப்பது பெரிய வாய்ப்பு என்று அவன் நம்பினுன். தன்னுடைய லட்சிய சாதனைக்கு அவள் இன்றியமையாதவள் என்றும் இதைப் புரிந்து கொள்ளாதவர்களும் புரிந்து கொள்ள முடியாதவர்களும் என்ன வேண்டுமானுலும் நினைத்துக் கொண்டு போகட்டும் என்றும் அவன் அலட்சியமாக இருந்தான். நினைப்பவள் யாமினியாகவே இருந்தாலும் அவன் கவலைப்படத் தயாராக இல்லை. ஒரு மனைவி என்றுல் கணவனைப் புரிந்து கொண்டு அநுசரித்துப் போகிற தன்மையும் அக்கறையும் அவளுக்கு இருக்க வேண்டும். அதெல்லாம் ஒருத்திக்குத் தெரியவில்லை என்றுல் வருவதை அநுபவித்துவிட்டுப் போகட்டும். அதற்கு யார்தான் என்ன செய்ய முடியும்?

'கவலைப்பட வேண்டியவள் யாமினி தானு? அவளுக்கு இந்த ஒரு கவலை தான். எனக்கு ஆயிரம் கவலைகள். ஒரு தொழிலில் துணிந்து இறங்கி, மூழ்கிப் போகாமல் சமாளித்து, அதில் நீந்திக் கரை சேர்வது என்ன, அத்தனை இள்ளுக்கீரையான விஷயமா ?' என்று அவன் தனக்குள் அடிக்கடி சொல்லிக் கொண்டான்.

'பெண்களுக்குச் சௌபாக்கியம் ஒன்றுதான் முக்கியம். வேறு எதைப் பற்றியும் எனக்குக் கவலையில்லை' என்று யாமினியும் அடிக்கடி சொல்லிக் கொண்டாள்.

## அத்தியாயம் 46

தன்னுடைய உயிரினும் மேலான சௌபாக்கியத்துக்கு உண்மையான சோதனை வந்து விட்டது என்று நிச்சயமாகத் தெரிந்து கொண்டாள் யாமினி. இரண்டு நாட்களாக ஊரிலிருந்து கொண்டே பாஸ்கரன் வீட்டுக்கு வரவில்லை. என்ன காரணம் என்று தெரியாமல் யாமினி துடிதுடித்துப் போனுள்.

மாதம் ஏழு முடிந்து விட்டது. அவளால் அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ளவோ அதிகமாக அலட்டிக் கொள்ளவோ முடியாத ஒரு நிலையில் அவள் ...ாரிடம் போய் முறையிட்டுக் கொள்வாள் ? தொழிற்சாலைக்குப் போன் செய்து பார்த்து அவளுக்குக் கிட்டத்தட்ட அலுத்தே போய் விட்டது. அங்கிருந்தவர்களுக்கெல்லாம் அவளுடைய தவிப்புப் புரிந்தது. ஆனுல் அவர்கள் என்ன செய்வார்கள்? முதல் நாள் வந்திருந்த பாஸ்கரன் சிறிது நேரமே இருந்துவிட்டு உடனேயே புறப்பட்டுப் போய் விட்டான். யாரும் எதிர்பார்க்கவில்லை. அதே போல இரண்டாம் நாள் வந்தவனேடு கூடவே அஜிதாவும் வந்திருந்தாள். இரண்டு பேரும் சரியான நிலையில் இருந்ததாகத் தெரியவில்லை.

முதல் நாளாவது தபாலைப் பார்த்து விட்டு, இன்ன இன்ன வேலைகள் முடிய வேண்டும் என்று குறிப்பு எழுதிவிட்டுப் போனுன். இரண்டாம் நாளோ எதற்காக வந்தார்கள், ஏன் போனுர்கள் என்று எண்ணும்படி இருந்தது. அப்படியும் துணிந்து ராஜேஷ் உள்ளே போனுன்.

''என்ன?'' என்ருன் பாஸ்கரன். குரலே ஒரு மாதிரியாக இருந்தது. முகமும் கண்ணும் சிவந்திருந்தன.

''வீட்டிலேயிருந்து போன் வந்தது.''

இதைக் கேட்டதும் பாஸ்கரன் அவளைப் பார்த்தான்; அவள் இவனைப் பார்த்தாள். இ ர ண் டு நிமிஷங்கள் பொறுத்து இருவருமே சொல்லி வைத்தது போல் சேர்ந்து சிரித்தார்கள்.

'' ஆமாம்; வீட்டிலேதான் டெலிபோன் இருக்கே. வந்திருக்கும். டயல் செஞ்சால் தன்னுலே லயன் கிடைச்சுட்டுப் போவுது !'' என்று காற்றிலேயே கைவிரலால் டயல் சுற்றிக் காட்டினுன். பிறகு உதடு வெடிக்கக் குபீரென்று சிரித்தான். அஜிதாவும் சிரிக்கிற பாவனையாக இருந்தாள்; எழுந்தாள்.

'' அதிருக்கட்டும் பாஸ்கர், நாம போகலாம் !'' என்ருள் அவள்.

அவள் மோக வலைவீசி நெளிந்து முன்னுல் செல்ல, அவன் மறு வார்த்தை பேசாமல் அவள்பின்னுலேயே போனுன். ராஜேஷ் அப்படியே மலைத்துப் போய் அவர்கள் சென்ற வழியையே பார்த்துக் கொண்டு நின்ருன்.

''என்ன மிஸ்டர், அப்படியே நின்னுட்டீங்க ? விஷயம் எங்கேயோ போயிட்டுது போலிருக்குதே !'' என்று கேட்டபடி வந்தான் மாணிக்கம்.

''பார்த்தீல்ல, இந்த அநியாயத்தை! சித்தைக்கெல்லாம் வீட்டிலேயிருந்து அம்மா போன் பண்ணுவாங்களே — அவங்ககிட்டே என்னத்தைச் சொல்லித் தொலைக்கிறது?''

''இவ எங்கே கிடந்து வந்து சேர்ந்தாள் இங்கே, நல்ல குடியிலே சனியன் வந்து புகுந்தாப்பலே? குடியைக் கெடுத்திடுவாள் போலிருக்குதே, மூதேவி !''

''என்னப்பா நீ எதுக்கெடுத்தாலும் போலிருக்கேன்னு சொல்லிக்கிட்டு ! இதுக்கு மேலே புதுசாக் கெடுக்கிறதுக்கு என்ன இருக்கு?''

இ ர ண் டு பேரும் வெகு நேரம் மண்டையைக் குழப்பிக் கொண்டார்கள். இன்னும் சில நண்பர்களும் சேர்ந்து கொண்டார்கள்.

''ஏன் மிஸ்டர், ஒண்ணு செய்தா என்ன? நம்ம சீஃப் வண்டி இங்கேதான் இருக்கு. அவர், அவள் வண்டியிலேயே போய் விட்டார். அதனுலே இதைக் கொண்டு போய் வீட்டிலே விடுறப்பலே விட்டுட்டு மிஸஸ் அம்மாவைப் பார்த்து விஷயத்தைப் பக்குவமாய்ச் சொல்லிப் புட்டால் என்ன ?''

''ஆமாம், மாணிக்கம், அந்த அம்மா போனிலே கூப்பிட்டுக் கேக்கறப்பல்லாம் என் வயிறு சங்கடப்படுது. இந்த உறவை உடனே வெட்டித்தான் ஆகணும். அதுக்கு வண்டி இருக்கிறது ஒரு நல்ல சாக்காப் போச்சு'' என்ருன் ராஜேஷ்.

''இதெல்லாம் அவங்க சொந்த விஷயம். நாம தலையிடக் கூடாது. ஒண்ணு நினைக்க ஒண்ணு ஆயிடும்!'' என்று பாபு எச்சரித்தான்.

கடைசியில் மாணிக்கம் மட்டும் வண்டியோடு போய், இருக்கிற நிலைக்குத் தக்கபடி நடந்து கொள்ள வேண்டியது என்ற முடிவுக்கு வந்தார்கள். அதன்படி மாணிக்கம் போய்ச் சேர்ந்த போது வீட்டில் யாமினி மட்டும்தான் இருந்தாள். பார்வதியம்மாளை வற்புறுத்தி அஜிதாவின் வீட்டுக்கு அனுப்பியிருந்தாள் அவள். பாஸ்கரன் அங்கேதான் இருப்பான் என்று நினைத்து எப்பொழுது போன் செய்தாலும் சரியான பதிலே கிடைக்கவில்லை. போனில் அகப்படாத வித்தையில் அஜிதா மிகவும் தேர்ந்தவள் என்று பாஸ்கரனே பம்பாய் அநுபவத்தைச் சொல்லியிருந்தான். அது இப்போது உறுதியாகி விட்டது. ஆனுலும் பார்வதியம்மாள் அஜிதாவின் வீட்டுக்குப் போய்ப் பார்க்க இலேசில் ஒப்புக் கொள்ளவில்லை.

''அங்கே இருந்தா போன் செய்திருக்க மாட்டானு? வேறே யாராவது தான் வந்து அவசரமா அவனைக் கூட்டிண்டு போயிருப்பா. அதுவே இல்லேன்னுலும் அஜிதா வீட்டிலேயே தான் இருந்துட்டுப் போகட்டுமே. அவள் என்ன அந்நியமா, அசலா? அவளும் தனியாக் கிடந்துதானே ஆபீசையும் வீட்டையும் பார்த்துண்டு திண்டாடருள்! அதனுலே இருந்தாலும் இருக்கலாம். இல்லாட்டா அவன் ஒரு நிமிஷம்கூட இருக்க மாட்டான். இங்கே வந்துதான் என்ன செய்யப் போருன்? நீயோ பிள்ளைத்தாய்ச்சிப் பொண்ணு. ஒரு வேலையும் செய்ய முடியாது. வந்தால் உனக்குத் தொந்தரவுதானே?'' என்று ஆயிரம் ஆட்சேப — சமாதானங்கள் சொல்லிக் கொண்டிருந்தாள்.

''அப்பச் சரி. நீங்க போக வேண்டாம். நானே போயிட்டு வரேன்!''

யாமினி அப்படி மிரட்டிய பிறகுதான் பார்வதியம்மாள் புறப்பட்டுப் போனுள். யாமினி என்ருல் வம்பாகப் போனுலும் போகும்; தான்






கௌசிகன்

எழுதும்

# சுழிக் காற்று

கல்கி

மார்ச் 28ல் ஆரம்பம்

போனால் பூசி மழுப்பிவிடலாம் என்கிற எண்ணத்தில்தான் அவள் போவதற்கு ஒப்புக்கொண்டாள். மாமியார் தன்னைப் போல் இருப்புக் கொள்ளாமல் பரபரக்கவில்லையே என்று யாமினிக்குப் பெரிய குறையாகத்தான் இருந்தது.

வண்டியோடு வந்த மாணிக்கத்தைப் பார்த்ததும் யாமினிக்கு அதிர்ச்சியாக இருந்தது. என்ன செய்தி கொண்டு வந்திருப்பானோ என்று கலங்கிப் போனாள்.

''வண்டி தேவைப்படும்னு அவர் விட்டுட்டு வரச் சொல்லியிருந்தாரா?''

''அதுக்குத்தான் உங்களைக் கேக்கலாம்னு...''

''இதை போனிலேயே கேட்டிருக்கலாமே!''



ஜான் ஹிக்கின்ஸ் (பாகவதர்) ஏழு ஆண்டுகளில் கச்சேரி செய்யும் அளவுக்குக் கர்நாடக இசையைக் கற்றுக் கொண்டதுடன் மிருதங்கம் கற்றுக் கொண்டார். தெலுங்கு மொழியை எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டார். இப்பொழுது பரத நாட்டியத்தில் ஆராய்ச்சி நடத்துகிறார்.

டைம்ஸ் வீக்லி - பாபு

பட்ட கவலையோடு நிறுத்திண்டால் தேவலே. அவரைப் பத்தி எனக்குத் தெரியும். அவருக்காகக் கவலைப்படறதுக்கு நான் ஒருத்தி இருக்கேன்; பாத்துக்கறேன். இப்ப அவரையோ என்னையோ கேட்காமல் வண்டியைக் கொண்டு வந்ததே தப்பு. இது சரியில்லே. முதல்லே இதைக் கொண்டு போய்த் தொழிற்சாலையிலே விட்டுடுங்க!''

மாணிக்கம் அப்படியே வெலவெலத்துப்போனான். பாபு எச்சரித்தானே!

''ஏதோ தெரியாமெ... முட்டாள்தனமா வந்திட்டேன். மன்னிச்சுடுங்க.'' கும்பிடு போட்டு விட்டுக் கிளம்பினான்.

''கொஞ்சம் இருங்க... வந்தது வந்தாச்சு. என்னை

''அப்படிச் செய்திருக்கலாம். ஆனால் இது விஷயமாய் ஏதாவது செய்தால் தேவலாம்னு சொல்லிட்டுப் போகத்தான் வந்தேன்.''

'' எது விஷயமாய் ?''

''நீங்களானு இங்கேயிருந்து போன் செய்துக்கிட்டே இருக்கீங்க. ஆனால் விஷயம் என்னவோ வேறே மாதிரியாப் போகும் போல இருக்குது. இப்பவே ஏதாவது செய்தால்தான் தேவலாம். அந்த அம்மா திசை திருப்பி, போகாத வழிக்குக்கொண்டு போயிடுவாளோன்னு நாங்க பயப்படறோம். இப்பக் கிளப்புக்குப் போக ஆரம்பிச்சிருக்காங்க போலிருக்கு. போகப் போக எங்கெல்லாம் போவாங்களோ ?''

யாமினிக்குத் தலையைச் சுற்றியது. அவனுக்கு முன்னால் அவமானத்தால், குன்றிச் சிறுத்துப் போய் நிற்பது போல உணர்ந்தாள். தன் மதிப்புக்குரிய கணவனைப் பற்றித் தன்னிடமே குறை சொல்ல வருவதற்கு இவனுக்கு என்ன துணிச்சல் என்று உள்ளூற ஒரு கோபமும் இதை இவன் சொல்ல வராமல் இருந்தால் என்ன ஆகும் என்ற பீதியும் ஒரே சமயத்தில் அவளுக்கு உண்டாயின. இருந்தாலும் சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவளாகப் பேசினாள்:

''நீங்க வந்து சொன்னது எப்படியோ இருக்கட்டும். எனக்கு என்ன படுகிறது, தெரியுமா ? நீங்கள்ளாம் அவரைப் பத்திக் கவலைப்படற அளவுக்குப் போகாமல், உங்க வேலை சம்பந்தப்

அந்த வீட்டிலே கொண்டு போய் விட்டுட்டுப் போயிடுங்க. கொஞ்சம் வேலையிருக்கு'' என்றாள். உள்ளே போய் சமையல்கார அம்மாளிடம் சொல்லி விட்டு வந்தாள்.

''முதல்லே டாக்டரைப் பார்த்துட்டுப் போகணும் !'' என்று வழியில் சொன்னாள்.

அதற்குப் பிறகு அஜிதா வீட்டிலேயே போய் இறங்கி, ''வண்டி இருக்கட்டும்; எனக்கு வேண்டியிருக்கும்'' என்று சொல்லி விட்டு உள்ளே போனாள்.

பார்வதியம்மாள் அவளை எதிர்கொண்டாள். ''நீ எதுக்கு வந்தே அதுக்குள்ளே? நான்தான் ஒருத்தி வந்திருக்கேனே — திரும்பி வர்றதுக்குள்ளே உனக்குப் பொறுக்கல்லியா?''

''இல்லே, டாக்டர் வீட்டுக்குக் கிளம்பினேன். அப்படியே வந்தேன்.''

அவள் வார்த்தையை முடிக்கவில்லை. அதற்குள் பாஸ்கரனும் பின்னாலேயே அஜிதாவும் மாடியிலிருந்து இறங்கி வருவதைப் பார்த்து விட்டாள். இருவருக்குமே முகமும் சரியாக இல்லை; நடையும் திடமாக இல்லை. யாமினிக்குக் குமுறிக் கொண்டு வந்தது.

'' ஓ ! அப்படியா?'' என்று தன்னை அடக்கிக் கொண்டு கேட்டாள் யாமினி.

'' ம்... அப்படித்தான்!'' என்றான் பாஸ்கரன், கேலி தொனிக்க.

''அப்படியே இருக்கட்டும்!'' என்று சொல்லி விட்டு, திரும்பிக்கூடப் பாராமல் வெளியேறினாள் யாமினி. (தொடரும்)

---

இக் கதையில் வரும் காட்சியைத்தான் இவ்விதழ் அட்டைச் சித்திரமாக வழங்குகிறார் ஓவியர் திரு கல்பனா.

# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

### 67

மனத்தையும் பேச்சையும் செயலையும் அடக்கியாள்வது பிரம்மசரியம். புலன்களின் மேல் நம்முடைய ஆட்சியை நாம் செலுத்த வேண்டும். அவை நம்மை ஆளவிடக் கூடாது. இதில் வெற்றியடைய நான் கூறிய கட்டுப்பாடுகள் மிக அவசியம் என்பதை நான் என்னுடைய அனுபவத்தில் கண்டு வருகிறேன். இது முடியாத காரியம் அல்ல. ஆனால் பலர் தோல்வியடைகிறார்கள். இந்திரியங்களை அடக்கியாள ஆசைப்படுகிறார்களே யன்றி அதற்கு வேண்டிய பல துறை முயற்சிகளைக் கையாள்வதில்லை. பிரம்மசரியத்தை அடைய ஆசைப்படுகிறவன் தன்னுடைய குற்றங் குறைகளை அவ்வப்போது அறிந்து கொள்வான். உள்ளத்தில் மறைந்து கிடக்கும் ஆசை வேகங்களைத் தேடிக் கண்டு கொண்டு, அவற்றை அகற்றிவிட இடைவிடாமல் முயல்வான். உள்ளத்தில் அலையும் எண்ணங்களை, முற்றிலும் வசப்படுத்திக் கொள்ள வேண்டும். உள்ளத்தில் தோஷம் இருக்கும் வரையில் பிரம்மசரியம் இல்லை என்று வைத்துக் கொள்ள வேண்டும். மனிதனுடைய உள்ளத்தில் எண்ணங்கள் தாமாகத் தோன்றும். வேண்டாம் என்றாலும் தோன்றிக் கொண்டேயிருக்கும். காற்றையும் அடக்கலாம். மனத்தை அடக்குவது அதைவிடக் கடினம். ஆனால் உள்ளத்தினுள்ளே ஈசனும் இருக்கிறான் அல்லவா? அவனுடைய அருள் பெறின் அந்த உள்ளத்துக்கும் சக்தி வரும், குற்றங்களைக் களைய. யாருமே இது முடியாத காரியம் என்று எண்ணி விட்டுவிடலாகாது. பெருஞ் செல்வத்தை அடைய நாம் செய்ய வேண்டிய முயற்சியும் பெரிதாகவே இருக்க வேண்டும். அதற்குப் பயப்படலாகாது.

நான் இந்தியாவுக்குத் திரும்பி வந்த பிறகுதான் பிரம்மசரியத்தை அடைவதற்கு மனிதனுடைய முயற்சி மட்டும் போதாது என்பதை உணர்ந்தேன். அதற்குமுன் நான் வேறுவிதமாக நினைத்தேன்: ஆகார நியமம் மட்டும் போதும், அதனாலேயே காமக் குரோதாதிகளை அடக்கிவிடலாம் என்று பைத்தியக்காரனைப் போல் எண்ணி வந்தேன். இங்கே வந்தபிறகே உண்மையை உணர்ந்தேன். ஈசன் அருளும் வேண்டும் என்பதை உணர்ந்தேன். என்னுடைய சொந்தக் கதையை இந்தச் சமயம் வளர்க்க வில்லை; நிறுத்திக் கொள்ளுகிறேன்.

தன்னம்பிக்கையும் தெய்வ பக்தியும் இரண்டும் போதிய அளவு இருந்தால் பிரம்மசரியத்தை அடையலாம், ஈசனையும் அடையலாம் என்று எல்லாருக்கும் உறுதி கூறி நிறுத்திக் கொள்கிறேன். உபவாசம் முதலிய விரதங்கள் அனுஷ்டித்து, புலன்களுக்கு நுகர்ச்சிப் பொருள் தராமல் இருக்கலாம். ஆனால் நுகர்ச்சியில் உள்ள ரஸம் உள்ளத்தை விட்டு நீங்காது. அந்த ரஸமும் நீங்க வேண்டுமானால் நோக்கம் ஈசனிடம் செல்ல வேண்டும். இது கீதா வாக்கியம். வீடு பெற வேண்டுவதற்கு வழி அவன் நாமமும் அவன் அருளுமே. இந்தியாவுக்குத் திரும்பிய பிறகுதான் நான் இதை உணர்ந்தேன்.

— கயசரிதம்

# சட்ட நிபுணர்களின் நகரம்

தி. சா. ராஜு

**மிக அதிகமான நடுவர்கள் கொண்ட மிகப் பெரிய உயர்நீதி மன்றம் முன்பு இங்குதான் இருந்தது. இடறி விழுந்தால் ஒரு வக்கீலோ நடுவரோ எதிர்ப்படுவார். ஒரு கடை வீதி முழுவதும் சட்டப் புத்தகங்களே!**



□ சௌக் நகரத்தின் நெரிசல் காடிகள் மிகுந்த நாற்சந்தி.

**ஊ**ரின் பெயரை அலகாபாத் என்று ஆங்கிலத்தில் எழுதியிருந்தாலும் இதன் சரியான பெயர் இலாஹாபாத் ஆகும். உருதுவிலும் ஹிந்தியிலும் அந்த வகையிலேயே எழுதவும் உச்சரிக்கவும் செய்கிறார்கள். 'இலாஹா' என்றால் இறைவன், தெய்வம் என்று அரபு மொழியில் பொருள். பலவிதங்களில் இந்த ஊருக்கு அந்தப் பெயர் பொருந்தும்.

நகரத்தின் நடுவில் அமைந்திருக்கிறது ஸ்டேஷன். ஒரு புறம் பழைய பகுதிக்குச் செல்லும் வழி. மற்ற பக்கம் சிவில் லைன்ஸ் எனப்படும் புதிய மனைகள் உள்ள பிரதேசம். சிவில் லைன்ஸ் பக்கம் இறங்கி வந்தோமானால் அண்ணல் காந்தியடிகள் இந்த நகரத்துடன் கொண்ட தொடர்பை விவரிக்கும் கற்பலகை ஒன்றைக் காணலாம். அவர் கமலா நேரு மருத்துவ மனைக்கு அடிக்கல் நாட்டியது, 1942ல் 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்துக்கு முன்னோடியாக நிகழ்ந்த காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் கலந்து கொண்டது—ஆகிய விவரங்கள் அதில் உள்ளன. எளிய நினைவு அடையாளம் எனினும் மனத்தில் பதியக் கூடியது. இத்தகைய நினைவுச் சின்னங்களை உத்தரப் பிரதேசத்தின் முக்கிய நகரங்களில் எல்லாம் காணலாம்.

அலகாபாத்துக்கு முந்தைய ஸ்டேஷன்களிலேயே யாத்திரிகர்களின் வண்டியில் பண்டாக்கள் தொற்றிக் கொள்வார்கள். பல சமயங்களில் அவர்களுடைய தொந்தரவு பொறுக்க முடியாததாக இருக்கும். ஆனால் அவர்களுடைய நிலைமையும் அனுதாபத்துடன் அணுக வேண்டும். சமய நம்பிக்கைகளில் மனிதனுக்குள்ள பலவீனத்தை எல்லாத் தேசங்களிலுமே பயன்படுத்திக் கொள்கிறார்கள். அவர்களை ஒரு பொறுப்புள்ள நிறுவனத்தின் தொண்டர்களாக ஆக்க முடியுமானால் யாத்திரிகர்களுக்கும், பண்டாக்களுக்கும் நல்லது. ஸ்ரீபிரகாசா அவர்களும் இப்படித்தான் கருதுகிறார்கள்.

உத்தரப் பிரதேச ரயில் நிலையங்களில் இரண்டு புதுமைகளைக் காணலாம். இந்த ஊர்வாசிகள் பானமருந்தும் பாத்திரங்களை உதட்டில் வைத்துத்தான் உபயோகிப்பார்கள். அனுபவித்துப் பருகுவதற்கு அது தான் ஏற்ற முறை. ஆனால் ஒவ்வொருவருக்கும் தனிப் பாத்திரம் இருக்கும். உபயோகித்த பிறகு அதை மண்ணினால் நன்றாகச் சுத்தம் செய்வார்கள். அதன் பொருட்டு ஒவ்வொரு ஸ்டேஷனிலும் குழாயடியில் சுத்தமான மண் நிரப்பிய தொட்டி ஒன்றிருக்கும்.

முன்பெல்லாம் குடிநீர், தேநீர், வெற்றிலை ஆகியவைகூட 'ஹிந்துபானி, முஸ்லிம் சா' என்று சமயத்தின் பெயரால் அழைக்கப்படும். நாடு விடுதலை அடைந்த பிறகு ரயில்வே அமைச்சராகப் பதவி வகித்த ஆஸைப் அலி செய்த முதல் காரியம் இதை ஒழித்ததுதான். நாட்டின் இப்பகுதியைப் பொறுத்த வரையில் இதை ஒரு புரட்சி என்றே கூற வேண்டும்.

முஸ்லிம் ஹோட்டலில் பரோட்டா சாப்பிடும் ஹிந்துவை இங்கு காண இயலாது.

தேநீர், மலாய் ஆகிய பண்டங்களை அவர்கள் மண் பாத்திரங்களிலேயே கொடுப்பார்கள். பார்க்கப் போனால் இது எவ்வளவோ சுகாதாரமானது. மேலும் நிறைய மண் வினைஞர்களுக்குத் தொழில் கிடைக்கிறது. இதில் தேநீர் குடிக்கும் போது மண் பானையில் சமைத்த புழுங்கல் அரிசிச் சோற்றின் இனிய மணம் வீசும். 'ப்ருத்வீ கந்தவதீ' என்பது கவியின் வாக்கு.



- ஆனந்த பவனம் - மோதிலால் நேருவின் இல்லம்.
- அண்ணலின் நினைவுக்கு அஞ்சலி.
- கங்கையும் யமுனையும் கலக்குமிடம் : திரிவேணி சங்கமம்.



'சிவில் லைன்ஸ்' என்பது நகரத்தின் சுத்தமான நவீன குடியிருப்புப் பகுதி. உயர்தர ஹோட்டல்கள் இங்குள்ளன. அகலமான நெடுஞ்சாலை. இருமருங்கிலும் சிமிட்டித் தளம். அடுத்து மலர்த்தோட்டம், புல்பத்தை; அதையடுத்துச் சிறு சிறு வட்டங்களில் அங்காடிகள். தமிழக அரசின் கைத்தறி அங்காடிகூட இங்கே இருக்கிறது. உத்தரப் பிரதேச அரசாங்க விற்பனை நிலையம் ஒரு கலைக் கருவூலம்.

இந்தப் பிரதேசத்து மக்கள் கங்கை நதிக்கு ஆலயத்தின் சிறப்பிடம் தருகிறார்கள். கிராமப்புறத்துப் பஞ்சாயத்துக்களில் கையில் கங்கைநீரைச் சுமந்து சொல்லும் வாக்கு சத்தியமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. 'கங்கை மேல் ஆணையாக' என்று அவர்கள் வாக்கில் வழங்குகிறது.

நகரத்தில் சிவில் லைன்ஸின் மத்தியில் நாற்சந்தியில் புல்வெளித் திடலில் செயற்கைக் குன்றின் மேல் கங்கைக் கன்னி நிற்கிறாள். அவள் சுமந்திருக்கும் குடம் வற்றாத நீரூற்று. கடுங் கோடையில் அதில் நீர் அருந்தப் பறவைகள் போட்டி போடுவது ஒரு வேடிக்கையான காட்சி. நாற்சந்தியைச் சுற்றி ஐஸ்க்ரீம் பார்லர்கள், சினிமாக் கொட்டகை, சிங்காரச் சாதனங்கள். தொடர்ந்து நடந்தால் புதிய ஹனுமார் கோயில். அதற்குள் மூன்று சந்நிதிகள். ஒருபுறம் இராம லட்சுமணர், மறுபுறம் துர்க்கை. நடுவில் சஞ்சீவி மலையுடன் ஹனுமான். தினமும் இந்தத் 'தென்னிந்தியத் தொண்டனுக்கு' விசேஷமான அலங்காரம். செவ்வாயும் சனியும் இங்கு மக்கள் கூட்டம் ஆயிரக்கணக்கில் திரளுகிறது. பல நூறு பேர்கள் ஒரே சமயத்தில் தரிசனம் செய்ய வகை உண்டு. இதன் நிர்வாகி பாபாராம் லோசன் பிரும்மச்சாரி. அருளே உருவானவர். கோயிலை இன்னும் விரிவுபடுத்திக் கொண்டேயிருக்கிறார் அவர். பிரயாகை நீர்க்கரை அருகிலும்



படுத்த நிலையில் பெரிய ஆஞ்சநேயர். காலையும், மாலையும் இங்கு கூட்டம் நெரியும்.

மேற்கே திரும்பி நடந்தோமானால் நகரத்தின் பழைய பகுதிக்கு வந்து விடுவோம். 'சௌக்' என்று அழைக்கப்படும் இந்தச் சதுக்கம்தான் நகரத்தின் பெரிய கடை வீதி. நள்ளிரவு வரையில் நெரிசல் இருக்கும். சேவல் கூவுவதற்கும் முன்னரே விழித்துக் கொண்டு விடும். எவ்வளவோ பொருள்கள் இங்கு விற்கப்பட்டாலும் இந்த ஊரின் சிறப்புப் பொருள் பிரித்துச் சேர்க்கக் கூடிய வலை பிரோக்கள். இதை ஒரு குடிசைத் தொழிலாகவே செய்கிறார்கள். பாத்திரம், துணிமணி, பழங்கள், கண்ணாடி, பொன்னகை, ஜமக்காளம், இசைக் கருவி, இறைச்சி எதுவானாலும் சில நிமிஷங்களில் வாங்கலாம்.

அலகாபாத் சட்ட நிபுணர்களின் நகரம். இந்திய நாட்டிலேயே மிக அதிகமான நடுவர்களைக் கொண்ட மிகப் பெரிய உயர்நீதி மன்றம் முன்பு இங்குதான் இருந்தது. இடறி விழுந்தால் ஒரு வக்கீலோ நடுவரோ எதிர்ப்படுவார். ஒரு கடை வீதி முழுதும் சட்டப் புத்தகங்களே விற்கப்படுகின்றன. பண்டித மோதிலால் நேரு இங்கே குடியேறியதற்கும் இதுவே காரணமாக இருந்திருக்கலாம். நகரத்தின் வெளியில் அவர் தமது மாளிகையை அமைத்துக் கொண்டார். அதன் வாசல் முகப்பில் இன்னும் அவருடைய பெயர்தான் துலங்குகிறது. இந்த ஊருக்கு வருபவர்கள் ஆனந்தபவனத்தைத் தரிசிக்காமல் போவதில்லை.

நகரத்தின் சிறப்பு அம்சம் இங்குள்ள பல்கலைக் கழகம். பல துறைக் கல்வியும் இங்கு போதிக்கப்படுகிறது. தொண்டுணர்ச்சியும், எளிமையும் மிக்க ஆசிரியர்கள் இதை வளப்படுத்தினார்கள். இன்று அதன் நிலையே வேறு. அது மூடப்பட்டிருக்கும் நாட்கள்தாம் அதிகமாக இருக்கின்றன.

மருத்துவக் கல்லூரிக்கு எதிரில் உள்ள கம்பெனிப் பூங்காவில் தேசபக்தர் சந்திரசேகர ஆஜாத் அமரரானார். அங்கே இவரது சிலை நிறுவப்பட்டுள்ளது. வாஞ்சி ஐயரைப் போல இவர் ஒரு விடுதலைப் புரட்சி வீரர். கைத்துப்பாக்கியின் உதவி கொண்டு பல போலீஸ்காரர்களை வீழ்த்திய பிறகு கடைசித் தோட்டாவைத் தமக்காக வைத்துக்கொண்ட இந்த மாவீரரது சொந்த ஊர் காசி.

ஹிந்தி மொழியின் முக்கிய கேந்திரங்களில் இதுவும் ஒன்று. முன்ஷி ப்ரேம்சந்த் நிறுவிய சரஸ்வதி அச்சகம் இன்னும் செயல்படுகிறது. உபேந்திரநாத் அஷ்க், ரவீந்திர காலியா, பலவந்த் சிங் ஆகிய பல பஞ்சாபிகள் ஹிந்தி எழுத்தாளர்களாக மாறி அம் மொழிக்குச் சிறந்த பணி புரிகிறார்கள். நிறையப் பிரசுராலயங்கள் உள்ளன. இவர்களிடையே ஒற்றுமை இருக்கிறது. இவர்கள் அடிக்கடி ஒற்றுமை உணர்ச்சியுடன் கூடிப் பிரியும் ஸிடி காஃபி ஹவுஸை நான் மரியாதை உணர்ச்சியுடன் கடப்பது வழக்கம்.

இந்தியாவிலேயே வெப்பம் மிகுந்த ஊர்களில் இதுவும் ஒன்று. மே, ஜூன் மாதங்களில் வெய்யிலின் கடுமையால் உயிர் இழப்பவர்கள் வெகு சகஜம். பறவைகள் மலரிதழ்களைப் போல் உதிர்ந்து மரித்துப் போகும். இரவிலும் உடலை எரிக்கும் வெப்பம். அக்காலங்களில் கங்கையில் நீர் வற்றிப் பற்பல இட்டுக்கள் தோன்றும். அந்த வண்டலில் கோடைக் காய்கறி விதைகளைத் தூவிவிடுவார்கள். கங்கையின் செழுமையை அந்தக் காய்கறிகளின் வளத்தின் மூலம் அறிந்து கொள்ளலாம். ஒட்டகத்தின் முதுகில் ஏற்றப்பட்டுச் சுமை சுமையாய் நகரத்துக்கு வரும் பறங்கி, வெள்ளரி, தர்பூஸ் ஆகியவை எல்லாம் அழிவிலைக்கு விற்கும்.

அலகாபாத் கொய்யாப் பழம் இந்தியாவிலேயே பெயர் பெற்றது. உரித்த தேங்காயின் அளவுக்கு இருக்கும், கரும்பாய் இனிக்கும். ஏழைகளின் ஆப்பிள். நெல்லிக்காயும் பெரிய எலுமிச்சையின் வடிவம், கனம். ஊறுகாய்க்கும் பாகிலிடவும் மிகவும் ஏற்ற காய்கள். எதிர்க் கரையான நைனியில் விவசாயப் பண்ணையே உள்ளது. அவர்கள் ஒட்டு முறையிலும் கொய்யா தயாரிக்கிறார்கள். நைனி இந்த நகரத்தின் தொழிற்பேட்டையும்கூட.

நைனி என்றதும் நேருவின் சிறைவாசம் நினைவுக்கு வராமல் இராது. அவர் இந்தச் சிறைகளில் பல காலம் வாடியிருக்கிறார். இங்கிருந்து அவர் தம் மகளுக்கு எழுதிய கடிதங்கள் கவிச் சுவையுடையவை.

ஹோலி, கிருஷ்ண ஜன்மாஷ்டமி, ராம்லீலா (தசரா) தீபாவளி ஆகியவைகளை நகரத்தில் மிகுந்த உற்சாகத்துடன் கொண்டாடுகிறார்கள். கண்ணனின் பிறப்பைப் பத்து நாட்கள் கொலு வைத்து வழிபடுகிறார்கள். நவராத்திரியின்போது ஒவ்வொரு பேட்டையிலும் ஒரு நாள் உற்சவம் உண்டு. அப்போது இவர்களிடையே காணப்படும் உற்சாகமும் தெய்வ வெறியும் தர்க்கத்தை மீறிய ஒன்று. கும்பமேளா அனைவரும் அறிந்ததே.

அசோக் நகர்ப் பகுதி அலகாபாதின் மாம்பலமாக விளங்குகிறது. தமிழ் வாரப் பத்திரிகைகள் கிடைக்கும். ஞாயிறன்று தமிழ்ப் படம் உண்டு.

கங்கைக் கரையில் கறவை எருமைகள் மிகுதி. ஒவ்வொன்றும் ஒரு குட்டி யானை. பல வாளி பால் தரும். தயிரில் கரண்டியை நட்டு வைக்கலாம். பாலேட்டினாலேயே இங்கு லட்டு ஒன்று செய்கிறார்கள். ஏட்டிலே இனிப்பிட்டுப் பனிக்கட்டியில் வைத்து... அடடா, அந்த மிட்டாய்க் கடைகளை மட்டும் சாக்கடை ஓரத்தில் வைக்காமல் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

திரிவேணி சங்கமத்தின் கரையில் பற்பல ஆலயங்கள், மடங்கள். ஒவ்வொரு மாநிலத்தவர்களும், சைவர்களும், வைஷ்ணவர்களும், தங்கள் தங்களுடைய பண்புக்கும் நியமத்துக்கும் ஏற்றவாறு அறச்சாலைகள் நிறுவியுள்ளார்கள். தமிழர்களுக்கான சிவமடமும், திரிதண்டி - வைஷ்ணவ மடமும் இயங்குகின்றன. ஆண்டு முழுவதும் யாத்திரிகர்கள் வந்த வண்ணம் இருக்கிறார்கள்.

இதன் நீரோட்டத்தில் படகு சவாரி செய்வது இனிய பொழுதுபோக்கு. அதற்கேற்ற படகுகளும் நிறைய உள்ளன. ஓடங்கள் பாதி ஆற்றில் போன பிறகுதான் படகுக்காரர்கள் கூலி பேசுவார்கள். முன்னதாகவே வாடகை நிர்ணயித்துக் கொள்வது நல்லது!

# விவா

இரு செயல் புரியும் ஆரோக்கிய பானம்

## பகலில் உடலுக்கு உரமூட்டும்...
## இரவில் நிம்மதியூட்டும்!




விவா பருகுங்கள்—சூடாகவோ, குளிர்ந்ததாகவோ, நீருடன் அல்லது பாலுடன் கலந்து. விவாவிலுள்ள ஆடைப்பால் செழுமையாக்கப்பட்டுள்ளது — மால்ட், கோதுமை மற்றும் புரதச் சத்துக்கள் சேர்க்கப்பட்டு. இது உங்கள் திசுக்களுக்கு உரமூட்டி, நரம்புகளுக்கு இதமூட்டி, தசைகளுக்கு வலுவூட்டுகின்றது.

காலையில் விவா பருகினால், பகல் முழுவதும் நீங்கள் உயிர்த்துடிப்புடன் விளங்குவீர்கள்! படுக்கும்போது அருந்தினால், இரவு முழுவதும் நிம்மதியுடன் உறங்குவீர்கள்!

விவா, எளிதில் ஜீரணமாகக்கூடிய உணவுப் பானம்— நோயாளிகளுக்கும் பிணியாறி வருபவர்களுக்கும் சஞ்சீவி!

## *சுவையில் சிறந்தது— விரைவில் கரைவது!*




Shilpi J.I. 28-71 Tam.

இந்தியாவில் தயாரிப்போர்:
ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்:
ஹோம் ப்ராடக்ட்ஸ் மார்க்கெட்டிங் ஏஜென்ஸி

# 33. விஷப் பரீட்சை

போலீஸ் அதிகாரிகளின் விசாரணை முடிந்தபோது நள்ளிரவாகி விட்டது. ஹோட்டல் சிப்பந்தியைப் போல் வேஷ மணிந்து சாரதாவைக் கொலை செய்ய முயன்ற தண்டாயுதபாணியை விலங்கிட்டு அழைத்துச் சென்றார்கள். போலீஸ் அதிகாரிகள் சென்ற பிறகும் சாரதாவின் பயம் தெளியவில்லை. இரவு முழுவதும் முரளியும் சாரதாவும் தூங்கவேயில்லை. முரளி, மிகுந்த மனக் கலக்கத்துக்குள்ளாகி யிருந்தான். சாரதா தன்னைக் கொல்லச் சதி நடப்பதாக முரளியிடம் ஆரம்பத்தில் கூறிய போது முரளி அது அவளுடைய மனப் பிரமை என்று இலேசாகக் கூறிவிட்டானல்லவா? அது வேறு இப்போது அவன் மனத்தைக் குடைந்தெடுத்தது. நான் அன்று அத்தனை அலட்சியமாகப் பேசிய தற்காகச் சாரதாவிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான்.



அதி காலையில் வெளியானசெய்திப் பத்திரிகையைப் படித்த போது முரளி, திடுக் கிட்டான். தண்டாயுத பாணி கைது செய்யப்பட்ட விவரத்துடன் அவனுடைய ஒப்புதல் வாக்குமூலமும் பத்திரிகையில் வெளியாகியிருந்தது.

கட்சித் தலைவர்களான குர்னம்சிங், நரேந்திர போஸ், சிவராமன் ஆகியோரைக் கொலை செய்தவன் தான்தான் என்றும், அந்தக் கொலைகளைச் செய்யும்படி தூண்டியவர் கட்சித் தலைவரான வேதமூர்த்தி என்றும், சாரதாவைக் கொலை செய்யும்படி கட்டளை இட்டவரும் வேதமூர்த்திதான் என்றும் அவன் தன் வாக்குமூலத்தில் கூறியிருந்தான்.

செய்திகளைப் பரபரப்புடன் படித்துக் கொண்டிருந்த முரளி, முதல் பக்கத்தில் வெளியாகியிருந்த மற்றொரு தலைப்புச் செய்தியைப் படித்துத் திடுக்கிட்டான்.

கிராண்ட் ஹோட்டல் அறையில் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த காந்தாமணி என்னும் பத்திரிகை நிருபர் தற்கொலை செய்து கொண்டு மாண்டு கிடந்தாள் என்ற செய்தியைப் படித்து விட்டுப் பதற்றம் அடைந்தான். அப்போதுதான் காந்தாமணி கொடுத்த கடிதத்தின் ஞாபகமே வந்தது. முந்தின நாள் ஏற்பட்ட குழப்பத்தில் அந்தக் கடிதத்தையே மறந்திருந்தான். பரபரப்புடன் பையிலிருந்து கடிதம் இருந்த உறையை எடுத்துப் பிரித்துக் கடிதத்தைப் படித்தான்.

காந்தாமணி எழுதியிருந்தாள்:

''அருமை நண்பர் முரளிக்கு,

உங்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு எனக்குச் சில தினங்கள்தான் கிடைத்தது என்றாலும், இந்தச் சந்தர்ப்பம், என் வாழ்க்கையில் மிகவும் முக்கியமானதாகும். தங்களுடைய தொடர்பு இன்னும் நீண்ட காலம் எனக்குக் கிட்ட வேண்டும் என்றுதான் என் உள்ளம் தவிக்கிறது. ஆனால் அந்தப் பாக்கியம் எனக்கு இல்லை.

கட்சியின் ஒரு பயங்கரமான கட்டளையை நிறைவேற்றி வைக்கத்தான் நான் தில்லிக்கு வந்தேன். ஆனால் வந்த பிறகு அதை என்னால் நிறைவேற்ற முடியாது என்பதை உணர்ந்தேன். கட்சியின் தீவிரமான கட்டுத் திட்டங்களும், பயிற்சி முறைகளும் என் பெண்மையைப் போக்கி முரட்டுத்தனத்தை எனக்கு அளித்து விட்டிருந்தாலும், இதயத்தில் எங்கோ ஒரு மூலையில் பெண்மையின் இயல்பு ஒட்டிக் கொண்டிருக்கிறது. இனிய இல்லற வாழ்வுக்காக நான் ஏங்குவதை யார் உணரப் போகிறார்கள்?

நண்பரே, தங்களுடைய அன்புக்கும், பாசத்துக்கும் என் இதயம் நன்றி செலுத்திக் கொண்டிருக்கிறது. தாங்கள் இதைப் படிக்கும்போது என் ஆன்மா விடுதலையடைந்திருக்கும். இந்த முடிவைத் தவிர வேறுவிதமாக என்னால் சிந்திக்க முடியவில்லை. நான் வாழ வேண்டுமானால், என்னிடம் அன்பு காட்டிய தங்கள் உயிரைப் போக்கியாக வேண்டும். கட்சியின் கட்டளை அது.

## போராட்டங்கள்

ர. சு. நல்லபெருமாள்

நீங்கள் வாழ்வதற்காக நான் சாகலாமே! அதில்தான் என் மனம் சாந்தி அடையும். கட்டளையை மீறிய குற்றத்துக்காக நான், கொலை செய்யப்படுவதை விரும்பவில்லை. ஆகவே, நானே எல்லாவிதச் சிந்தனைகளிலிருந்தும் கட்டுப்பாடுகளிலிருந்தும் விடுதலையாகிப் போகிறேன்.

அன்புடன்,
காந்தாமணி.''

கடிதத்தைப் படித்துமுடித்த முரளியின் கண்கள் கலங்கின. காந்தாமணியோடு பழகிய சில நினைவுகளை எண்ணியபோது மிகுந்த ஆற்றாமைக் குள்ளானான். கடைசியாக அவனுடைய மோதிரத்தைக் கேட்டு வாங்கி அவள் அணிந்து கொண்டதை எண்ணியபோது முரளியால் அழுகையைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதான்.



சிறிது நேரத்தில் சாரதா குளித்து விட்டு வருவது தெரிந்ததும், அழுவதை நிறுத்தி அவளுக்குத் தெரியாமல் கண்களைத் துடைத்துக்கொண்டான். சற்று நேரத்தில் சாரதாவுக்கு விஷயத்தைத் தெரியப்படுத்தி அவளையும் அழைத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்கு விரைந்தான். ஆஸ்பத்திரியில் நிருபர்களின் கூட்டம் மொய்த்துக் கொண்டிருந்தது. மிகுந்த சங்கடத்துடன் காந்தாமணியின் சடலம் இருக்கும் அறைக்குள் சென்று பார்த்தான். காந்தாமணியைக் கண்டதும் சாரதாவினால் அழுகையை அடக்க முடியவில்லை. புடவையால் வாயைப் பொத்திக் கொண்டு அழுதாள். மரணத்திலும் காந்தாமணியின் உதடுகளில் தங்கியிருந்த புன்முறுவலைக் கண்டு மனம் நெகிழ்ந்தான் முரளி. அவளுடைய விரலில் கிடந்த மோதிரத்தைப் பார்த்தான். அவனையும் மீறிக் கண்கள் கலங்கின. அங்கு நிறைந்திருந்த அத்தனை கூட்டத்திலும் அவள் மீது அக்கறை கொள்ள முரளி ஒருவனுக்குத் தான் உரிமை உண்டு என்பதை அந்த மோதிரம் உணர்த்திக் கொண்டிருந்தது. வாழ்க்கையில் இழக்கக் கூடாத ஒன்றைத் திடீரென்று இழந்து விட்டது போன்ற சூன்ய உணர்

## ஓரே சலவையில் 3 வழிகளில் செயல் புரிந்து...




# டெட் துணிகளை அதிவெண்மையாக்குகிறது

— மற்ற எந்த பவுடரையும்விட.

**இதோ, எப்படி என்று பாருங்கள்:**

1. **டெட்** டிலுள்ள தனிப்பட்ட சக்திவாய்ந்த பொருள் அதி விரைவாகத் துணியில் ஊடுருவிச் சென்று, மறைந்துள்ள அழுக்கைக்கூட கொடியில் விரட்டி அடிக்கிறது. துணிகள் வெண்மையாகின்றன.
2. **டெட்** அழுக்கை வெளிக்கொணர்ந்த பிறகு, அது மீண்டும் படியாமல் தடுக்கிறது. துணிகள் அதிக சுத்தமாகின்றன; சுத்தமாகவே நீடித்து இருக்கின்றன.
3. **டெட்** துணிகளை அதிவெண்மையாக்குகிறது. துணிகள் முன்னைவிட அதிவெண்மையுடன் பளிச்சிடுகின்றன. (நீலம் அல்லது வெண்மைச் சாதனம் சேர்க்கவேண்டிய அவசியமில்லை.)

**இன்றே டெட் வாங்குங்கள்!** ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ், பம்பாய்.

SHILPI HPMA 38A/70 TAM

வுடன் அந்த அறையை விட்டு வெளியே வந்தான் முரளி.

மறு நாள் வெளி வந்த செய்தி, புதுதில்லியைப் பரபரப்படையச் செய்து விட்டது.

கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரைக் கைது செய்து கல்கத்தா காரியாலயக் கட்டடத்தைச் சோதனை செய்த போது சீனாவுடன் அக்கட்சி இணைந்து இந்தியாவுக்கு எதிராகச் செய்ய முனைந்திருக்கும் பயங்கரமான சதித் திட்டங்கள் பல வெளிப்பட்டன என்றும், இந்தச் சதி அம்பலமானதற்குக் காரணமாக இருந்து உதவியவர், 'பாரதமணி'ப் பத்திரிகையின் ஆசிரியரான முரளி என்றும், தண்டாயுதபாணியை முரளி அடித்து வீழ்த்தியிராவிட்டால் இந்தச் சதி வெளியே தெரியாமலே போயிருக்கும் என்றும் நாட்டுக்குப் பெரும் கேடு விளைவித்திருக்கும் என்றும் பத்திரிகைச் செய்தி கூறியது.

எல்லாப் பத்திரிகைகளும் முரளிக்கு நன்றி செலுத்திப் பாராட்டியிருந்தன.

சாரதாவுக்கு நேரவிருந்த ஆபத்து விலகி விட்டதை அறிந்து முரளி, அவளை அழைத்துக் கொண்டு ஊர் திரும்பினான். விமான நிலையத்தில் பேராசிரியர் கமலசாமி பரபரப்புடன் பாய்ந்து வந்து சாரதாவையும், முரளியையும் அணைத்துக் கொண்டார். வரவேற்க வந்திருந்த ராஜரத்தினம் மிகுந்த ஆர்வத்தோடு முரளியின்கைகளைப் பற்றிக்கொண்டார்.

''நாட்டுக்கே பெரிய சேவை செய்து விட்டீர்கள், முரளி! ஒரு பெரிய சதி வெளிப்பட நீங்கள் காரணமாக அமைந்தது பற்றி எனக்கு மிக்க மகிழ்ச்சி'' என்று பாராட்டினார்.

விமான நிலையத்திலிருந்து காரில் சென்று கொண்டிருக்கும் போது ராஜரத்தினம் முரளியைப் பார்த்து, ''மிஸ்டர் முரளி! இந்தச் சமயத்தில் ஒரு துயரச் செய்தியைச் சொல்ல வேண்டியிருக்கிறது'' என்றார்.

முரளி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

''நேற்று இரவு, கம்யூனிஸ்ட் கட்சிக் காரர்கள் சிலர், 'பாரதமணி'க் கட்டடத்துக்குள் புகுந்து நாசம் விளைவித்திருக்கிறார்கள்'' என்றார் அவர்.

''ஐயையோ.....! எல்லாம் போய் விட்டதா...?'' என்று அலறினான் முரளி.

''சேதம் கொஞ்சந்தான். நியூஸ் பிரிண்டில் கொஞ்சம் தீப்பற்றி எரிந்து விட்டது. போலீஸார் விசாரணை நடத்திக் கொண்டிருக்கிறார்கள்.''

''இவர்கள் விசாரணை நடத்தி என் நஷ்டத்தை ஈடு செய்துவிடப் போகிறார்களா....? நான் நேரே ஆபீசுக்கே போகிறேன்.....'' என்றான் முரளி பரபரப்புடன்.

கார், 'பாரதமணி'க் கட்டடத்தை நோக்கி விரைந்தது.

'பாரதமணி'க் காரியாலயத்தைச் சுற்றிக் கூட்டம் கூடியிருந்தது. போலீஸார் கட்டடத்தைச் சுற்றிக் காவல் இருந்தார்கள். முரளி, கட்டடத்தைச் சுற்றிப் பார்த்த போது, வேதனையால் அவன் மனம் தவித்தது. கிட்டத்தட்ட ஐம்பதினாயிரம் ரூபாய்க்கு மேல் சேதமிருக்கும். டெலிபிரிண்டர் மிஷினும், டைப்ரைட்டர்களும் நசுங்கியிருந்தன. மேஜை நாற்காலிகள் அனைத்தும் நொறுங்கி விட்டிருந்தன. கட்டடத்துக்குள் ஒரு பொருளையாவது நாசக்காரர்கள் விட்டு வைக்கவில்லை. நல்ல வேளையாக அச்சு இயந்திரம் இருக்கும் பகுதி மட்டும் தப்பிப் பிழைத்தது.

முந்தின நாள் இரவு நடந்த பயங்கரத்தைச் சாமிநாதன் விவரித்தபோது முரளியின் உடல் சிறிது நடுங்கியது.

நூறு பேருக்கு மேல் அதிகாலை நான்கு மணிக்குக் கட்டடத்தைத் தாக்கத் தொடங்கினார்கள். அப்போது காரியாலயத்தில் சாமிநாதனையும் காவல்காரனையும் தவிர வேறு யாரும் இல்லை. மற்ற உதவி ஆசிரியர்களும் அச்சுத் தொழிலாளர்களும் வீட்டுக்குப் போய் விட்டார்கள். தாக்குதல் தொடங்கியதும் சாமிநாதன், போலீஸ் அதிகாரிகளுக்குப் போன் செய்தான். தாக்குபவர்கள், கதவுகளை உடைத்துக் கட்டடத்துக்குள் புகுந்தபோது, சாமிநாதன் தப்பி ஓடிக் குளியலறையில் ஒளிந்து கொண்டான். காவல்காரன் எங்கோ ஓடிவிட்டான். மேஜை நாற்காலிகள் நொறுங்கும் சத்தம் வெகு நேரம் கேட்டுக் கொண்டிருந்தது. கடைசியில் நியூஸ் பிரிண்ட் பற்றி எரிவதைச் சாமிநாதன் சிறு சன்னல் வழியாகப் பார்த்தான். ஒன்றும் செய்ய இயலாமல் பரிதவித்துக் கொண்டிருந்தான். முக்கால் மணி நேரத்துக்குப் பிறகுதான் போலீஸ் படை வந்தது. போலீஸைக் கண்டதும் அனைவரும் ஓடி விட்டார்கள். நல்ல வேளையாக அச்சு இயந்திரங்களும் வேறொரு தனி அறைக்குள்ளிருந்த நியூஸ் பிரிண்ட் தாளும் தப்பின.

நடந்த சம்பவத்தைக் கேட்ட முரளிக்குக் கோபம் கொந்தளித்து எழுந்தது. ஆனால் யார் மீது காட்டுவது? கோபம் கண்ணீராக மாறியது.



"வெற்றி! வெற்றி!"

"என்ன தேர்தலில் ஜெயித்து விட்டீர்களா?"

"இல்லை! நானும் பரந்தாமனும் பந்தயம் வைத்தோம். எனக்கு டெபாசிட் கிடைக்காது என்றேன். அவன் கிடைக்கும் என்றான். பந்தயத்தில் எனக்குத்தான் வெற்றி!"

ஏற்பட்டுவிட்ட நஷ்டத்தைக் கண்ணால் பார்த்து மலைத்து நின்றான். ஓர் ஆட்டுக் குட்டியை ஓநாய்கள் சூழ்வதைப் போல் 'பாரதமணி'யைச் சுற்றித்தான் எத்தனை பகைவர்கள்!

கண்களில் நீர் மல்க நின்ற முரளியின் தோளை அணைத்தவாறு ராஜரத்தினம் ஆறுதல் சொன்னார்.

"கவலைப்படாதே.... எல்லாம் சீக்கிரமே சரியாகிவிடும்.... நான் உதவுகிறேன்....." என்றார்.

"எத்தனை முறைதான் சார், நீங்கள் உதவ முடியும்?" என்று கேட்டான் முரளி, தழுதழுக்க.

"ஏன்? நல்ல காரியத்துக்கு உதவிக் கொண்டே இருப்பேன்."

"ஏற்கனவே உங்களிடம் கடன்பட்டிருக்கிறேன்" என்ற முரளி, சிறிது நேரம் எரிந்து கிடந்த சாம்பலையே வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு சாமிநாதனைப் பார்த்து, "கைவசமுள்ள நியூஸ்பிரிண்ட் எத்தனை நாளைக்குக் காணும்?" என்று கேட்டான்.

"எரிந்தது போக மீதமுள்ளது இன்னும் ஒரு மாதத்துக்குத்தான் காணும். பாங்கில் அதன் மீது கடன் வாங்கியிருக்கிறோம்" என்றான் சாமிநாதன்.

"பணம் கட்டினால் அல்லவா பாங்க் பொறுப்பிலுள்ளதைப் பெற முடியும்" என்றான் முரளி, ஆயாசத்துடன்.

"இப்போது அவசரத்துக்கு எவ்வளவு தேவைப்படுகிறது?" என்று கேட்டார் பேராசிரியர் கமலசாமி.

"எவ்வளவு தேவைப்பட்டால் என்ன? இனி என்னுடைய பத்திரிகைக்காக யாரிடமும் கடன் வாங்கப் போவதில்லை" என்றான் முரளி, உறுதியாக.

"நான் கடனாகத் தரவில்லை" என்றார் பேராசிரியர்.

"நான் இனாமாக வாங்கத் தயாராக இல்லை. இனி இந்தப் பத்திரிகையை மக்கள்தான் பிழைக்க வைக்க வேண்டும்" என்றான் முரளி திடமாக.

பேராசிரியர் கமலசாமியும் ராஜரத்தினமும் ஒன்றும் புரியாமல் விழித்தார்கள். முரளி சொன்னான்:

"தரம் வாய்ந்த பத்திரிகையைச் சாக விடக் கூடாது என்னும் துடிப்பு மக்களுக்கு இருக்க வேண்டும். பத்திரிகைக்கு நேர்ந்த துன்பத்தை விளக்கிச் சொல்லி மக்களிடமே உதவி கோரப் போகிறேன். மக்களால் முடிந்த அளவு பணம் அனுப்பட்டும். நாட்டைச் சீனாவின் சதியிலிருந்து காப்பாற்றியதாகப் புகழ்ந்தீர்களே; அதற்கு நன்றியை மக்களிடம் எதிர்பார்க்கிறேன்" என்றான் முரளி, ஆவேசத்துடன்.

"விஷப் பரீட்சையில் இறங்குகிறீர்கள். மக்களை நம்பாதீர்கள். 'பாரதமணி'யின் வாழ்வையோ, தாழ்வையோ பற்றி மக்களுக்கு அக்கறை கிடையாது" என்றார் ராஜரத்தினம்.

"டில்லியில் பல வெளிநாட்டுப் பத்திரிகை நிருபர்களையும், அதிபர்களையும் சந்தித்துப் 'பாரதமணி'யின் வளர்ச்சிக்கான திட்டத்தை வகுத்துக் கொண்டு வந்திருக்கிறேன். பத்திரிகையில் பல புதிய பகுதிகளை ஆரம்பிக்கத் திட்டமிட்டிருக்கிறேன். எல்லாவற்றையும் மக்களிடம் சொல்லி உதவி கேட்கிறேன்.... நம்முடைய மக்களை அவ்வளவு தரம் குறைந்தவர்களாக நான் கருதவில்லை" என்றான் முரளி. அவனுடைய குரலில் நம்பிக்கை இருந்தாலும் உள்ளூறக் கவலையும் தொனித்தது.

முரளியின் பிடிவாதத்தை மாற்ற முடியாது என்பதை உணர்ந்த பேராசிரியர் கமலசாமியும், ராஜரத்தினமும் மௌனமாயிருந்தனர்.

மறு நாள் வெளியான 'பாரதமணி'யில் முரளி ஓர் அறிக்கை விட்டிருந்தான்:

"அன்பார்ந்த வாசகர்களுக்கு,

மக்களின் நலமும், நாட்டின் நலனுந்தான் 'பாரதமணி'யின் லட்சியம். இந்த லட்சியத்துக்கு இடையூறாக எத்தனையோ பகைவர்கள் இருக்கிறார்கள். கம்யூனிஸ்ட் கட்சியின் சதித் திட்டங்கள் பல வெளிப்பட நான் காரண



ஆஹா... என்ன
இன்பம்!

# லக்மே

**லேவெண்டர்
பியூடி டால்க்**

Lakmé
...DER BEAUTY TALC

ASP/L-81

**உங்களுக்குப் புதியது!
லேவெண்டரிலே
மிகச் சிறந்தது!**

அன்றலர்ந்த மலர்களின் நறுமணத்தை லக்மே லேவெண்டரில் புகுத்தியிருக்க வேண்டும்! அதனால்தான் அத்தனை கோடி இன்பம், அதனை மேனியிலே தூவும்போது! அது உங்கள் மேனியை பட்டுப்போலாக்கிப் பராமரிக்கிறது. அதன் இதமான நறுமணம் நாள்முழுதும் உங்கள் மேனியுடன் உறவாடுகிறது; முகப் பொலிவைப் பன்மடங்கு பெருக்குகிறது!

மாக அமைந்து விட்டதால்தான் 'பாரத மணி'க் காரியாலயம் தாக்கப்பட்டது. நாட்டின் நலனுக்கு உதவியாக இருந்த தால், எனக்குக் கிடைத்த பரிசு இது. இந்த அதிர்ச்சியிலிருந்து விடுபட்டுப் பத்திரிகை நீடித்து நடக்க வேண்டு மானால், ஒரு மாதத்துக்குள் ஐம்பதினு யிரம் ரூபாய் வேண்டும். மக்களிட மிருந்தே பெற வேண்டும்; பெற முடியும் என்ற உறுதியில்தான் இந்த விண்ணப்பம் வெளியிடப்படுகிறது. உங்களால் முடிந்த அளவுக்குப் பணம் அனுப்புங்கள். ஒரு பைசாவை அனுப் பினாலும் மனமுவந்து ஏற்பேன். நீங்கள் அனுப்பும் பணம் பெரிதல்ல. உங்க ளுடைய மனந்தான் எனக்குப் பெரிது. அதை நம்புகிறேன்.

'' 'பாரதமணி' வாழ வேண்டுமா, வேண்டாமா என்பது இப்போதைய பிரச்னை அல்ல. பத்திரிகைத் தர்மமும் தரமும் வாழ வேண்டுமா, வேண் டாமா என்பதுதான் பிரச்னை. முடிவு செய்ய வேண்டியவர்கள் நீங்கள்.''

இந்த அறிக்கையைப் படித்துவிட்டு ராஜரத்தினம் சிரித்தார். முரளியின் மீது அவருக்குப் பச்சாத்தாபம் தோன் றியது. போன் மூலமாக முரளியைக் கூப்பிட்டு இந்த முயற்சி வெற்றிபெற ஆசி கூறினார்.

''உங்களுக்கு நம்பிக்கை இல்லை. ஆனால் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. 'பாரதமணி'யை மக்கள் கைவிடமாட் டார்கள்'' என்றான் முரளி. இதைக் கேட்டு ராஜரத்தினம் சிரிப்பது போனில் கேட்டது.

''மிஸ்டர் முரளி, ஒன்று செய்யுங்க ளேன்..... நீங்கள் யாரிடமிருந்தும் கடனுகை வாங்க வேண்டாம். நானும் பேராசிரியரும் தலைக்கு ஐம்பதினாயிரம் தருகிறோம். 'பாரதமணி'யின் பங்கு தாரராக எங்களைச் சேர்த்துக் கொள் ளுங்கள். பேராசிரியர்தான் உங்களிடம் இதைச் சொல்லச் சொன்னார்'' என்றார்.

''வேண்டாம் சார்! இந்தப் பத் திரிகை மக்களுக்காகப் பணி புரிகிறது. இதற்குச் சங்கடம் வரும் போது மக்கள் தான் இதில் அக்கறை காட்ட வேண் டும். எப்போது தேசத் துரோகிகளைக் காட்டிக் கொடுத்ததற்காக இந்தப் பத்திரிகை தாக்கப்பட்டதோ, அப் போதே மக்களிடமிருந்து உதவி கோர இந்தப் பத்திரிகை உரிமை பெற்றுவிட் டது. மக்கள் கடமையைச் செய் கிறார்களா இல்லையா என்பதைத்தான் பார்ப்போமே!'' என்றான் முரளி, ஆவேசத்துடன்.

'' மக்கள் விழித்தெழுந்து உதவி செய்வதற்குள் 'பாரதமணி' மூடிப் போகும்.''

''போகட்டும். ஒரேயடியாக அழிந்தே போகட்டும்'' என்றான் முரளி மிகுந்த கோபத்துடன்.

அவனுடன் வாதாடிப் பயனில்லை என்பதை அறிந்து, ''பைத்தியக்கார முயற்சிதான்'' என்று கூறிவிட்டுப் பேச்சை வேறு திசையில் திருப்பினார் ராஜரத்தினம்.

''வேதமூர்த்தியையும், தண்டாயுத பாணியையும் தில்லியில் விசாரிக்கப் போகிறார்கள் போலிருக்கிறதே!'' — என்றார்.

''ஆமாம்; நான்கூடச் சாட்சி சொல் லத் தில்லிக்குப் போக வேண்டியிருக்கும். சாரதாவும் வரவேண்டியிருக்கும்.''

''ஓகோ! நீங்களும் சாரதாவும் இன்னும் ஒரு முறை தில்லிக்குச் செல் லும் வாய்ப்பு இருக்கிறது என்று சொல்லுங்கள்! மிஸ்டர் முரளி, அடுத்த தில்லிப் பயணம், அநேகமாக உங்கள் 'ஹனிமூ'னாக இருக்கும் என்று நம்பலாமா?'' என்று கேட்டார் ராஜ ரத்தினம்.

''ஹனிமூனு.....?'' — திகைப்புடன் கேட்டான் முரளி.

''என்னுடைய யூகம் அப்படி....சரி தானே?......''

''நோ.... நோ... உங்கள் யூகம் தவறு'' என்றான் முரளி.

''நேற்று கிளப்பில் பேராசிரியர் கமலசாமியிடம் பேசிக் கொண்டிருந்த போது ஏதோ சொன்னார். அதிலிருந்து நான் கணித்தேன்.''

'' உங்கள் கணக்குப்படி விடை சரி யாக இருக்கலாம். ஆனால் கணக்கே தவறாக இருந்தால்...?''என்றான் முரளி.

''ஓ! அப்படியா!'' என்று முனகிக் கொண்டே போனைக் கீழே வைத் தார் ராஜரத்தினம். (தொடரும்)

பதஞ்சலி சாஸ்திரிகள் நொந்து கொள்கிறார்: ''ஜடம், ஜடம்... வெறும்ஜடம்.''

தங்கை சிவகாமுவைப் பற்றிக் கூறிய வார்த்தைகள் இவை. சிவகாமுவுக்குத் தமயன் சொன்ன 'ஜடம்' என்ற சொல்கூட உறைக்கவில்லை. ''கோபமா அண்ணா?''— அவள் மெள்ளக் கேட்கிறாள். அண்ணாவின் சினத்துக்கான ஆதங்கம்கூட அவள் குரலில் இல்லை.

''பின்னே கோபம் வராம உன்னே வாழ்த்தவா தோணும்? உன் மகன் ஜக்குவை எத்தனையோ கஷ்டப்பட்டு டாக்டருக்குப் படிக்க வைத்தோம். நம்ப பட்ட பாடு வீணாகலே. இன்னிக்குப் பெரிய டாக்டர்னு' இந்தச் சின்ன வயசிலேயே பெயர் வாங்கிட்டான். எம். டி. பட்டம் வந்தாச்சு. இப்ப ஒரு புது மருந்து கண்டுபிடிச்சதுக்காக அவனுக்குச் சர்க்காரிலே சன்மானம் தரப் போறா. பம்பாயிலிருந்து அவன் அதை எழுதியிருக்கான்னு நான் சொன்னதாவது புரிஞ்சுதா இல்லையா?''

''புரியறது. எல்லாம் ஆண்டவனோட கருணை.''

''என்ன 'உம்'? நம்ம குழந்தை புத்திசாலி. நம்ம கைராசி அவன் முன்னுக்கு வரான்.''

சிவகாமு நின்ற இடத்திலேயே நிற்கிறாள். முகத்தில் மட்டும் அவளுக்கே உரிய புன்னகை தோன்றுகிறது.

பதஞ்சலிக்குச் சகோதரியிடம் ஒருவித வருத்தமும் உண்டு. 'அண்ணா, எல்லாம் நீங்க வளர்த்த வேலை' என்று சொல்லக்கூடத் தெரியவில்லையே, இந்தச் சகோதரிக்கு.

சிவகாமு கையில் ஏதோ புத்தகத்தை வைத்துக் கொண்டு ஒரு பக்கமாக அமர்ந்துவிட்டாள். புத்தகம் கீதையாக இருக்கும்.

பதஞ்சலி சகோதரியைப் பார்த்தபடி இருக்கிறார். சொந்தப் பிள்ளை புகழைத் தேடிக்கொண்டு நிற்கிறான். இவளுக்குப் பெருமைப்படத் தெரியவில்லையே. இதையேதான் அவர்




பதஞ்சலிக்கு இப்போதும் எரிச்சல். ''என்ன பெண்ணோ நீ. உன் வயிற்றில் பிறந்த 'பையன் எல்லோரும் புகழும்படி இருக்கான்னு ஓர் ஆர்வமும் குதூகலிப்பும் கூடவா காட்ட மாட்டே? முகத்தில் மகிழ்ச்சி, பெருமை உணர்ச்சியாவது வேண்டாமா?'' அவன் புகழ் உலகம் முழுதும் பரவப் போகிறது. அமெரிக்காவுக்குப் போய் ஆராய்ச்சி செய்யப்போகிறான்.''

''உம்...''

மீண்டும் நினைவுக்குக் கொண்டு வருகிறார். இவள் இப்படி திடமாக மாறின வித்தை தான் அவருக்குப் புரியவில்லை. ஜக்குவுக்கு நாலு வயசிருக்கும். இவன் அப்பன் சங்கரன் சொல்லாமல் கொள்ளாமல் எங்கேயோ ஓடி விட்டான். இன்னமும் அவன் இருக்கும் இடம் தெரியாது. அதை நினைத்து எப்படி யெல்லாம் அழுவாள், மூலமிடுவாள்? என் பிள்ளை அநாதையாகி விட்டானே என நெஞ்சுருகப் புலம்புவாள். மகனுக்கு அட்ச ராப்பியாசம் முடிந்து, அவன் ஒவ்வொரு வகுப்பிலும் முதலாவதாக வரும்போது திருஷ்டி சுற்றிக் கழிப்பாளே, அவளா இப்போது நாடு புகழும் நிலையில் இருக்கும் போது, 'என் மகன்' எனப் பெருமை காட்டத் தெரியாமல் இருக்கிறாள். ஆரம்பத்தில் துயரை அவள் மறக்கவேண்டும் என்பதற் காகப் பொழுதுபோக்காக இருக்கட்டும் என்றே அவளைத் தன்னுடைய உபந்யாசங் களுக்கெல்லாம் அழைத்துச் சென்றார். முதலில் அங்கெல்லாம் வரக் கூட அவள் இசைய மாட்டாள். இப்போது தமையனுக் குப் பிரவசன அலுவல் இல்லாவிடில் வேறு எங்காவது நடக்கும் உபந்யாசத்துக்குக் கிளம்பி விடுகிறாள். எத்தனைக்கெத்தனை மனத் துயரையும், மன மகிழ்ச்சியையும் வெளிக் காட்டிக் கொண்டிருந்தாளோ, இப்பொழுது அத்தனையையும் எங்கேயோ மறந்து வைத்து விட்டவளாகக் காட்டாமலே இருக்கிறாள். ஏன் இப்படி? மூளை ஒருகால் பாதித்திருக்குமோ...?

முடிவுக்கு வரவே முடியாத சிந்தனை. பதஞ்சலி சிந்தனையை விரட்டுபவராக எழுந் தார். கீதையில் சில பாகங்களை ஊன்றிப் படிக்க வேண்டும். அன்று மாலை அவருக்கு ஓர் உபந்யாசம்.

''சிவகாமு, இன்று மாலை கீதாசாரம் சொல்லப் போகிறேன். திரும்ப நேரமாகும். இரவுச் சாப்பாடு வேண்டாம்.''

''தெரியும் அண்ணா. காந்தி சபாவில் தானே பிரவசனம்?''

''ஆமாம். அங்கேதான்.''

ஜக்கு வெளிநாட்டுக்குப் பயணமாவது ஏற்பாடாகி விட்டது. பயணப்படுவதற்கு முன் தாயையும் மாமனையும் சந்திக்க ஒரே ஒரு நாள் சென்னைக்கு வருகிறான். பதஞ் சலிக்குக் கொள்ளைக் குதூகலம். பையன் எப் படி வளர்ந்து விட்டான்! அவன் அம்மாவைப் போல் சிவந்த மேனி. வயதுக்குத் தகுந்த வளர்த்தி.

வீட்டில் விருந்துக்கு ஏற்பாடு செய்கிறார் பதஞ்சலி. நண்பர்களும் உறவினர்களுமாக வந்து ஜக்குவைப் புகழ்ந்து விட்டு, அவனை வளர்த்த பதஞ்சலியையும் புகழ்கிறார்கள். ''இந்த மாமா காரணமாகத்தான் நீ முன் னுக்கு வர முடிந்ததப்பா. அவரை நீ மறக்கக் கூடாது. உன் தந்தை உங்களுடன் இருந்து இதையெல்லாம் பார்க்கக் கொடுத்து வைக்க வில்லை. உன் மாமாவையே உன் அப்பாவாக நினைத்துக்கொள்'' என்கின்றனர்.

ஜக்கு புறப்பட்டுச் சென்று விட்டான். அமெரிக்காவிலிருந்து அவன் கடிதம் எழுதி வந்தான்.

படிப்பும் ஆராய்ச்சியும் முடிந்து ஜக்கு மீண்டும் பம்பாய்க்கு வந்து முன்போல் அங்கேயே தங்கி விட்டான். பதஞ்சலி அவ னுக்கு விவரமாகக் கடிதம் எழுதினார். அவ னுக்கு அவர் செய்ய வேண்டிய கடமைகளில் ஒன்று பாக்கி நிற்கிறது. அவனுக்கு நல்ல பெண்ணாகப் பார்த்து விவாகம் செய்து வைத்து விட்டால் அவரது பொறுப்பும் கடமையும் முழுவதும் கழிந்து விடும். அதற்குத் தாம் ஏற்பாடு செய்யப் போவ தாகவும் உடனே ஒரு மாத லீவில் சென்னைக்கு வரும்படியும் எழுதி யிருந்தார்.

அதற்கு ஜக்கு எழுதியிருந்த பதில் அவரைக் கோபத்துக்கும் ஆத்திரத்துக்கும் ஆளாக் கியது. அவர் இரைய ஆரம்பித்தார். 'துரோகி, நன்றி கெட்டவன்.'

''என்ன அண்ணா, என்ன?'' — சிவகாமு கேட்கிறாள்.

''உன் செல்லப்பிள்ளை இருக்கானே, அவன் என்ன எழுதியிருக்கான் தெரியுமா? அவன் காதலில் இறங்கி விட்டானாம். காதலில்! மராட்டிப் பெண்ணாம். இவனோடு தொழில் புரிபவளாம். அவளைத்தான் மணப்பானாம். எனக்குக் கடமைப்பட்டவன்தானாம். நான் இந்தக் காதலுக்குச் சம்மதிக்காவிடில், செய் நன்றிமறக்காமல், மாதம் இருநூறு ரூபாயோ, அதற்கு மேலோ நம் சுகமான வாழ்வுக்குப் பணம் அனுப்புகிறானாம். எப்படி இருக்கிறது, பார்த்தாயா?''

சீறிச் சீறிப் பாயும் புயலாக அவர் பாய் கிறார். சிவகாமு கவனமாகக் கேட்டுக்கொள் கிறாள். ஒரு விநாடி மௌனத்துக்குப் பிறகு, பேசுகிறாள்.

''அந்தப் பெண்ணையே விவாகம் செய்து கொள்வதென்ற முடிவுக்கு வந்துவிட்டா னுமா?''

''கடிதம் உறுதியாகத்தான் வந்திருக் கிறது. ரெஜிஸ்தர் செய்து கொள்ளும் ஏற் பாடும் ஆகிவிட்டது.''

''அப்படியா?''

''புகழும் பொருளும் சேர்க்க ஆரம்பித்து விட்டானல்லவா? இனி நம்மை ஏன் மதிக்கப் போகிறான்? இனி நம்மிடம் ஆகவேண்டியது ஒன்றுமில்லை, நயவஞ்சகன், நன்றி கெட்ட வன். நான் எத்தனையோ தியாகங்கள் அவனுக் காகச் செய்திருக்கிறேன். இதையெல்லாம் அவன் கொஞ்சமாவது நினைத்துப் பார்த் தானா! என்னுடைய முதிய பருவத்தில் இவன் என்னைக் காப்பாற்றுவான் என்று தானே இத்தனையும் செய்தேன்...''

பதஞ்சலி இன்னும் எத்தனையோ பேசு கிறார். சிவகாமு மௌனமாகவே இருக்கிறாள். கடைசியில் பதஞ்சலி கூறுகிறார்: ''நீ இன் றைக்கே அவனுக்குக் கடிதம் போடு. நீயும் நானும் எத்தனை யெல்லாம் செய்திருக் கிறோம் என்று எழுது. நன்றி கெட்டதனமாக இருக்காதே என்று சொல்லு.''

''வேண்டாம் அண்ணா! இதெல்லாம் நாம் எழுத வேண்டாம். நாம் செய்ததெல்லாம் பலனை எதிர்பாராத கடமைகள். அதை அவனுக்குப் போய்க் காட்டுவானேன்?''

பதஞ்சலி விர்ரென்று தம் சினத்தை யெல்லாம் சகோதரியின் பக்கம் திருப்புகிறார். ''எனக்குத் தெரியுமே. நீ உன் மகன் பக்கம்

மார்ச் 12ம் முதல் சென்னை பாரகன்·பிரபாத்·கிருஷ்ணவேணி·சரஸ்வதி மற்றும் தென்னகமெங்கும்



மாடர்ன் தியேட்டர்ஸ்

# ஜஸ்டிஸ் விஸ்வநாதன்



கதை-வசனம்:
ஏ.எல்.நாராயணன்

பாடல்கள்:
கவிஞர் கண்ணதாசன்

இசை:
வேதா

டைரக்‌ஷன்:
ஜி.ஆர்.நாதன்

# அடிக்கடி சிறுநீர் கழிப்பது

அடிக்கடி சிறுநீர் கழிப்பது ஒரு கொடிய வியாதி. அது, பாதிக்கப்பட்டவரை நாளுக்கு நாள் மரணப் பாதையை நோக்கி இட்டுச் செல்லும்.

இவ்வியாதியால் அல்லல்படுவோருக்கு அதிக தாகம், பசி, உடல் பூராவும் வலி ஏற்படும்; உடலால் உழைக்கவோ, அல்லது மூளையை உபயோகப்படுத்தி வேலை செய்யவோ உற்சாகமிராது. நாளுக்கு நாள் உடல் எடை குறையும். உடலில் ஒருவித நமைச்சல் ஏற்படும், சரும வியாதியால் அவதியுறுவர். கல்லீரல் மந்தமாகி, மூத்திரக் காய்கள் பலவீனமடைந்து, சரிவர இயங்காது. இந்த வியாதியை உடனடியாகக் கவனிக்காவிடில், கீல் வாயு, பார்வைக் குறைவு, தூக்கமின்மை, அதிகக் களைப்பு, உடலில் கட்டிகள் ஏற்படுவது போன்றவைகளால் கஷ்டப்பட நேரிடும்.

பழையகாலத்திலிருந்து அனுசரிக்கப்பட்ட யூனானி முறைப்படி அபூர்வ மூலிகைகளினால் தயாரிக்கப்பட்ட "யூரிடோன்" மாத்திரைகள் இந்தக் கொடிய வியாதியை குணப்படுத்தும்.

"யூரிடோன்" மாத்திரைகளை உபயோகப்படுத்தி, ஆயிரக்கணக்கானவர்கள் பயன் அடைந்துள்ளனர். அடிக்கடி சிறுநீர் போவது கட்டுப்படுத்தப்பட்டு, ஒரு சில நாட்களிலேயே வியாதியின் அல்லல்களிலிருந்து நிவாரணம் அடைந்து மன நிம்மதியைப் பெறுகின்றனர்.

"யூரிடோன்" சிக்கனமானது, பத்திரமானது, எளிதில் எடுத்துச் செல்லக் கூடியது. உணவு உட்கொள்ளுவதில் விசேஷ கட்டுப்பாடுகள் ஏதும் இல்லை. சாதாரண உடல்நலமுள்ளவர்களும் நல்ல ஆரோக்கியமாக இருக்க இதை உட்கொள்ளலாம். விவரங்கள் அடங்கிய இலவச பிரசுரத்துக்கு எழுதவும்.

40 மாத்திரைகள் கொண்ட பாட்டில் விலை ரூ. 10. பாக்கிங் தபால் செலவு ரூ. 2 தனி.

ஒரே தடவையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட பாட்டில்களுக்கு ஆர்டர் அனுப்புபவர்களுக்கு பாக்கிங் மற்றும் தபால் செலவு இலவசம்.

**Barrys Remedies Laboratories**
**(K. L)**
G. P. O. BOX 874
CALCUTTA-1

## ஆஸ்துமா நிவாரண மூலிகை

ராஜஸ்தான் பிரபல அரசியல் சமூகத் தலைவர் காலஞ்சென்ற ஸ்ரீ சம்புநாத் அவர்களின் பேரன் ஸ்ரீ கேசவ் மோஹன்லால் ஏழைகளுக்கு ஆஸ்துமா நிவாரண மூலிகை வினியோகிக்கிறார். ஸ்ரீ சம்புநாத் அவர்களுக்கு இந்த மூலிகை ஒரு சந்நியாசியால் கொடுக்கப்பட்டு கடந்த 40 ஆண்டுகளாக இலவசமாக வினியோகிக்கப்பட்டது. இந்தத் தன்னலமற்ற சேவைக்கு அரசாங்கம் உபகாரச் சம்பளம் அளித்தது. ஆனால் இந்த நற்பணியை அவர் தன் பேரனிடம் ஒப்படைத்து விட்டு துறவியானார். தற்பொழுது இப் பணியை பேரன் நடத்துவதோடு இதற்கும் பண உதவி செய்யுமாறு தனவந்தர்களைக் கேட்டுக் கொள்கிறார். மூன்று டோஸ் மருந்து சாப்பிட்டதுமே ஆஸ்துமாவினால் அவதியுறும் பலர் நிவாரணமடைந்துள்ளனர். ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்கள் மூலிகைக்கு கீழ்க்கண்ட விலாசத்திற்கு ஆங்கிலத்தில் எழுதவும்.

SRI KESHAV MOHAN LAL
**5, Haralaldas Lane, Jorabagan Park, West**
**CALCUTTA-6 (India)**

எங்களுக்கு கிளை ஆபீஸ்கள் இல்லை

மேற்கு வங்காள சங்கங்கள் ரிஜிஸ்டிரேஷன் ஆக்ட் 1961 கீழ் நிறுவப்பட்ட பாபா ஸ்ரீ சம்புநாத் சேவா கேந்திராவினால் வியாதியஸ்தர்கள், டாக்டர்கள், மருத்துவர்கள் அளிக்கும் நன்கொடையின் மூலம் ஆஸ்துமாவினால் அவதியுறுபவர்களின் நலனுக்காக வெளியிடப்பட்டது

NAA/K/70

மூல நோயை
முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
—ரண
சிகிச்சையையும்
தடுங்கள்

பரிந்து வர வேதாந்தப் போர்வைக்குள் அடங்கப் பார்க்கிறாய். அம்மா, பிள்ளை இருவரும் சேர்ந்து விடுவீர்கள். உங்களுக்காகப் பாடுபட்ட நான் மட்டும் தனியே நிற்பேன்.''

சிவகாமு அங்கிருந்து நகர்ந்து விட்டாள்.

ஜக்குவின் காதல் திருமணம் பற்றி ஊரெல்லாம் பேச்சுப் பரவுகிறது. சிலர் பதஞ்சலியிடம் அநுதாபம் காட்டுகின்றனர். சிலர், 'ஊருக்குத்தான் உபதேசம். தம் மருமானை அடக்கத் தெரியவில்லை' என்கின்றனர். பதஞ்சலியோ ஜக்குவைத் திட்டித்தான் அனைவரிடமும் பேசுகிறார். தம் தியாகத்தையெல்லாம் கூறி, தாம் ஏமாற்றப்பட்டு விட்டதாகப் புலம்புகிறார். ஜக்கு ஓரிரு மாதங்கள் பணம் அனுப்புகிறான். அதை அவர் பெறவில்லை. அத்துடன் இருவர் தொடர்பும் நின்றுவிடுகிறது.

சிவகாமு முன்பு போலவே ஒன்றையும் பேசவில்லை. வழக்கப்படி சமையல், பூஜை, உபந்நியாசங்களுக்குச் செல்லுதல் என்ற அலுவல்கள் தொடருகின்றன. மகளைப் பற்றி அவள் பேசவில்லை.

பதஞ்சலிக்குச் சிலமுறை சகோதரியின் கவலை ஏற்படுகிறது. ஜடமாக இருக்கிறாளே, நான் போய்விட்டால் அவளை யார் காப்பாற்றுவார்கள்? அவர் ஒரு நாள் சொல்லிவிடுகிறார். ''சிவகாமு, எனக்குப் பிறகு உன்னை யார் பார்த்துக் கொள்வார்கள்? மராத்தியோ, குஜராத்தியோ நீ வேண்டுமானால் பிள்ளையிடம் போய் விடுகிறாயா?''

''எதற்கு அண்ணா? இங்கு நீங்கள் சத்விஷயங்களாக உபந்யசிக்கும்போது நான் எதற்கு அங்கே போவது? எனக்குப் பிறப்புத் தந்த ஆண்டவன் வளர்ப்புக்கு வழி காட்ட மாட்டானா?''

பதஞ்சலி மேற்கொண்டு பேசவில்லை.

பம்பாய் ஸ்ரீராம் சபாவில் பதஞ்சலிக்குக் கீதை பிரவசனத்துக்கான அழைப்பு வந்தபோது அதை அவர் ஏற்க வெகுவாகத் தயங்கினார். அங்கு போனால் ஜக்குவைச் சந்திக்கும்படி நேரிட்டால்...? ஆனால் அவர் அந்தப் பிரவசன ஏற்பாட்டை மறுக்க முடியாதபடி நிர்ப்பந்தம் ஏற்பட்டது. பல பெரிய மனிதர்கள் ஒன்றாகச் சேர்ந்து அவரை வெகுவாக வேண்டிக் கொண்டனர். சிவகாமுவைத் தம்முடன் அழைத்துச் செல்ல அவர் விரும்பவில்லை. உள்ளூர்ப் பெரிய மனிதரும் காந்தி சபாக்காரருமான முதலியாரோ ஒரு வேண்டுகோளை விடுத்து விட்டார். பம்பாயிலிருக்கும் அவர் சகோதரி மீனாட்சி இருதயநோய் காரணமாக ஒரு மாதமாகப் படுத்த படுக்கையில் இருக்க வேண்டியிருக்கிறது. தெய்வபக்தி கொண்ட அவள் அந்தக் காலத்தில் சத்விஷயங்களைக் கேட்க விரும்புகிறாள். பெண்ணுக்குப் பெண் உதவியாகச் சிவகாமு அவள் அருகில் இருந்து நல்ல விஷயங்களைப் படித்துக் காட்டவோ, விளக்கிச் சொல்லவோ பொறுப்பு ஏற்றால் உதவியாக இருக்கும். பதஞ்சலியால் அந்தப் பெரிய மனிதரின் வேண்டுகோளை மறுக்க முடியவில்லை.

பம்பாய் நகரம் அமர்க்களப்படுகிறது. தென்னிந்தியர்களும் தமிழ் அறிந்தவர்களும் மாலை நேரத்தை ஆவலுடன் நோக்கினர். பதஞ்சலிக்கே மக்களின் பக்தி வியப்பை அளித்தது. எங்கும் அவர் செய்து வந்த உபன்யாசத்தைப் பற்றின பேச்சு, விமரிசனம். ஒரு மாதம் தங்கச் சென்றவர், பல இடங்களில் உபந்யாசங்களுக்கு அழைப்பு வந்து, மூன்று மாதங்கள் தங்கும்படி நேரிட்டது. அவர் தந்த கீதை விளக்கம் அனைவரையும் கவர்ந்தது.

மீனாட்சியோ சிவகாமுவின் காரணமாக விரைவில் குணம் கண்டு விட்டாள். சிவகாமு படித்துக் காட்டி விளக்கம் தந்தவை அனைத்திலும் அவள் நெகிழ்ந்து போனாள். ஆண்டவனைத் தன் அருகிலேயே காண்பதாக உணர்ந்தாள். பிரிய நேரிடுகிறதே என்ற வருத்தம்



## அமெரிக்கா செல்லும் விநாயகர்

எருக்கஞ் செடியில் வெள்ளெருக்கன் செடி என்று ஒரு வகை இருக்கிறது. இந்தச் செடி மிகவும் அபூர்வமாகத்தான் காணப்படும். பூக்கள் அசல் வெண்ணிறமாக இருக்கும். பூக்களும் வேரும் அதிக சக்தியும் மகிமையும் கொண்டவை; பூசைக்கு உகந்தவை.

இந்தச் செடியின் பூமிக்குள் சென்றிருக்கும் வேரைக் கொண்டு வந்து பூசை செய்யப்படுகிறது. வேர் காயக் காய, சிறு சிறு ஆயுதங்களைக் கொண்டு விநாயகர் செதுக்கப்படுகிறது. மிகவும் நுணுக்கமான வேலை. சிலையின் உயரமே மூன்று அங்குலந்தான் இருக்கும். அதைக் கையால் பிடித்துக் கொள்ளக் கூட முடியாது. அதில்தான் எல்லா வேலைகளையும் செய்தாக வேண்டும். வேலை முடிய ஏறக்குறைய ஒன்றரை மாதங்கள் ஆகும். வேலை முடிந்த பிறகு பார்த்தால் விநாயகர் சிலை மிகவும் அற்புதமாயிருக்கும்.

வெள்ளெருக்கன் வேரில் விநாயகர் செய்வதற்கு அரிய பயிற்சியும், மேம்பட்ட திறமையும், பக்தி உபாசனையும் சிற்பியாருக்கு இருக்க வேண்டும்.

தற்சமயம் தவத்திரு குன்றக்குடி அடிகளார் முயற்சியின் பேரில் அமெரிக்காவில் உள்ள நியூயார்க் நகருக்கு அனுப்பப்படும் வெள்ளெருக்கன் வேர் விநாயகர் இரண்டு மாத காலமாகச் செய்யப்பட்டது. சில விசேஷ வேலைகள் அதில் இடம் பெற்றுள்ளன. இதைச் சிற்பி வி. பக்கிரிசாமி (வயது 73)யும், அவரது மகன் சிற்பி நெல்லையப்பரும் (வயது 38) உருவாக்கினார்கள். விநாயகர் சிலை மிகவும் அபூர்வ அழகோடு அமைந்துள்ளது.

சிலையின் உயரம் சுமார் ஆறு அங்குலம். அகலம் மூன்று அங்குலம். இவ்வளவு பெரிய உரு அமைக்கக்கூடிய வெள்ளெருக்கன் வேர் கிடைப்பது மிக மிகக் கஷ்டம். — வி.ப.க. மூர்த்தி

கூட ஏற்பட்டது. ஊருக்குப் புறப்படு முன் நாஸிக் முதலிய க்ஷேத்திரங்களுக்குப் பதஞ்சலியைச் சில அபிமான பக்தர்கள் அழைத்துச் சென்றனர். சிவகாமு போகவில்லை.

அங்கிருந்து பதஞ்சலி திரும்பியதும் இருவரும் சென்னைக்குப் பயணமானார்கள். ஸ்டேஷனுக்கு வந்த பிறகுதான் பதஞ்சலிக்கு ஒரு விஷயம் தெரிந்தது... ஸ்டேஷனில் இவர்களைத் தேடி ஒரு பெண் ஓடோடி வந்தாள். சிவகாமுவிடம் கூடை நிறையப் பழங்களைக் கொடுத்துவிட்டு அவள் கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொண்டாள்.

''அம்மா, நீங்கள் செய்த உதவியை மறக்கவே முடியாதம்மா. நான் உங்களால்தான் குணமடைந்தேன். நீங்கள் இன்றே புறப்படுவது எங்களுக்குத் தெரியாது. இல்லாவிட்டால் என் கணவர் தன் கிராமப் பயணத்தைத் தள்ளிப் போட்டு விட்டு வந்திருப்பார். சுமதி சொன்ன பிறகுதான் இன்று காலை உங்கள் பயணம் பற்றி எனக்குத் தெரிந்தது. உடனே ஓடி வந்தேன். உங்களுக்கு எப்படி நன்றி செலுத்துவதென்றே புரியவில்லை...''

''ஆண்டவனுக்கு நன்றி செலுத்தம்மா. அவன்தான் உன் நோயைக் குணப்படுத்தியவன்'' என்கிறாள் சிவகாமு.

அந்தப் பெண் சிவகாமுவைப் பலவாறாகப் புகழ்கிறாள். பிறகு பதஞ்சலியின் கால்களைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்கிறாள். ரயில் நகர்ந்ததும்தான் பதஞ்சலி அந்தப் பெண்ணைப் பற்றிச் சிவகாமுவிடம் கேட்கிறார்.

''நன்றாகத் தமிழ் பேசுகிறாள் அன்னை. இவளைத்தான் ஜக்கு மணந்திருக்கிறான்.''

தூக்கி வாரிப் போடுகிறது பதஞ்சலிக்கு. ''என்னது? ஜக்குவின் மனைவியா அவள்? அந்த மராத்திப் பெண்ணா? உனக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்? என்ன பேச்சு அவளோடு உனக்கு?''

சிவகாமு விளக்கம் தருகிறாள். இந்தப் பெண் சோபாவின் சிநேகிதிதான் மீனாட்சியைக் கவனிக்கும் டாக்டர் சுமதி. என்னதான் மருத்துவத்தில் முன்னேறியிருந்தாலும் மந்திரத்திலும் நம்பிக்கை வைத்திருந்த சுமதி, சோபாவுக்கு வந்திருந்த மஞ்சள் காமாலைக்கு மந்திரிக்க வேண்டுமென்று வற்புறுத்தவே, மீனாட்சியின் மூலம் சிவகாமுவுக்குக் காமாலைக்கு மந்திரிக்கத் தெரியும் என்ற செய்தி அறிந்து உடனே சோபாவுக்கு மந்திரிக்க ஏற்பாடு செய்தாள். சோபாவுக்குக் குணமாகி விட்டது.

''உன் மகனை மயக்கி நம்மிடமிருந்து பிரித்தவள் இவள்தான்னு சொல்லவில்லையா?'' என்று பதஞ்சலி எரிச்சலுடன் கேட்கிறார்.

''சோபா யார் என்பதைச் சுமதி சொன்னதும் எனக்குப் புரிந்து விட்டது.''

''புரிந்துமா நீ மந்திரிக்க ஒப்புக்கொண்டாய்? எனக்கு அப்பவே தெரியும். பிள்ளைப் பாசம் உன்னை விடவில்லை. உன் பிள்ளையின் மனைவிங்கறதுக்காக நீ உருகிப் போய் மந்திரிச்சிருக்கே.''

''பிள்ளை, நாட்டுப் பெண் எல்லாம் எனக்குத் தோணலே. காமாலை நோயால் ஒருத்தி கஷ்டப்படறாள். அந்த நோய்க்கு எனக்கு மந்திரிக்கத் தெரியும். ஒரு பெண் குணமடைய நான் உதவி யிருக்கேன். முதலியாரின் சகோதரி எனக்கு எப்படியோ அப்படித்தான் இந்தப் பெண்ணும். மீனாட்சிக்கு என்னால் உதவ முடிந்ததில் எத்தனை ஆனந்தமோ, அந்த அளவுக்குத்தான் இந்தச் சோபா குணமடைந்ததிலும் ஏற்படுகிறது.''

சிவகாமு அத்துடன் நிறுத்திவிட்டாள். ஆனால் பதஞ்சலிக்கு அவ்வளவு எளிதில் தம் சினத்தை அடக்கிக் கொள்ள முடியவில்லை. அவர்கள் பெட்டியில் அதிக ஜனங்கள் இல்லாததால் ரயில் போய்க் கொண்டிருக்கும்போதே அவளுக்கு மட்டும் கேட்கும்படி சினச் சொற்களைக் கொட்டினார்.

சென்னைக்குத் திரும்பிய பிறகு வெகு நாட்கள்வரை சகோதரரிடம் சிவகாமு ஏச்சுப் பேச்சுக்களைக் கேட்கத்தான் வேண்டியிருந்தது. ஆனால் அதில் அவள் மனத்தைத் தளர விட்டதாகத் தெரியவில்லை. 'ஜடம், நான் சொன்னாலும்கூடப் புரியாது' என்கிறார் பதஞ்சலி.

**கா**லம் ஏறுகிறது. தமக்குப் பிற்காலம் சிவகாமுவின் கதி எப்படி யாகும் என்ற கவலைக்குப் பதஞ்சலியை ஆளாக்க ஆண்டவனுக்கு விருப்பமில்லை போலும். சிவகாமுவுக்கு எப்படித்தான் அந்த மாய ஜுரம் தொத்திக் கொண்டதோ, டைபாய்டு என்பதோடு ஆபத்தான நிலை என்றும் டாக்டர்கள் கூறிவிட்டனர். நண்பர்களும் பக்தர்களும் பதஞ்சலிக்காக உருகிப் போகின்றனர். சிவகாமுவைக் கவனிக்க ஓடோடி வருகின்றனர்.

''இத்தனை செய்கிறார்கள் எல்லோரும். அவளுக்கெனச் சொந்தமான கணவனோ, மகனோ அருகில் இல்லையே'' — பதஞ்சலியிடம் முதலியார் கூறுகிறார்.

அன்று மாலையே அவர்கள் சற்றும் எதிர்பாராமல் சிவகாமுவின் கணவர் சங்கரன் வந்து நிற்கிறார். அடையாளம் புரிந்துகொள்ளக்கூடக் கஷ்டமாகி விடுகிறது. எங்கெல்லாமோ அலைந்து வெளி நாட்டுக்குப் போய்ச் சம்பாதித்தவர். சிவகாமுவுக்குத் தாம் இழைத்து விட்ட தீங்கை நினைத்து நினைத்து மாய்ந்தவர் திடீரெனப் புறப்பட்டு வந்து விட்டார். பதஞ்சலியின் உபந்யாசங்களைப் பற்றித் தென்னாட்டுத் தினசரிகளில் அவர் அடிக்கடி படித்து வந்ததால் அவர்கள் இருப்பிடத்தைக் கண்டுபிடிப்பது கஷ்டமாக இருக்கவில்லை.

சிவகாமு மரணப் படுக்கையில் இருப்பது அறிந்து தவித்துப் போகிறார். ''சிவகாமு! என்னை மன்னித்துவிடு. உன்னைத் தவிக்க விட்டு விட்டு ஓடிப் போய்விட்டேன். நான் பாதகன்.'' அவர் கதறுகிறார்.

சிவகாமு நல்ல நினைவோடுதான் இருக்கிறாள். ஆனால் கணவரை மீண்டும் சந்தித்து விட்டதில் உணர்ச்சிப் பெருக்கில் தவித்து விடவில்லை. 'ஜடம்' என்கிறார் பதஞ்சலி. சிவகாமுவின் முகத்தில் புன்னகை தெளிகிறது.

சிவகாமு கணவரிடம் மெள்ளக் கூறுகிறாள்: ''மன்னிப்பு எதற்கு? இது ஆண்டவன் விருப்பம். கீதையில் அர்ஜுனனிடம் பகவான் கூறுகிறார்: 'நீ இத்தனை பேரை மாய்க்கத் தயங்கினாலும், இத்தனை பேர்களும் மாண்டுதான் போவார்கள். நீ ஒரு

TRAYONS

# டிரேயான்ஸ் டிரேயோபேன் மிகச் சிறந்தது ரேயான் டிரேடர்ஸ் அளிப்பதால் இன்னும் சிறந்தது

இடைவிடா ஆராய்ச்சி, உற்பத்திக் கண்காணிப்பு, இவற்றின் விளைவாக உருவாகும் டிரேயான்ஸ் டிரேயோபேன் உங்கள் விற்பனைப் பொருள்களுக்கு மிகச் சிறந்த பாதுகாப்புப் பொருளாக விளங்குகிறது. அரிய உயிர் காக்கும் மருந்துகள், சிகரெட்டுகள், வாசனைச் சாமான்கள், ஜவுளிகள், மிட்டாய்கள் போன்ற பல விதமான பொருள்களை, ஈரம், தூசி, பூச்சி, புழுக்கள், எண்ணெய், அழுக்கு, வாயு போன்ற எவையும் பாதிக்காமல் காக்கின்றது. டிரேயான்ஸ் டிரேயோபேனுல் பாக் செய்யப்பட்ட உங்கள் பொருள்களின் பெயர், விற்பனை வாசகங்கள், ஆகியவை வாங்குவோரின் கவனத்தைக் கவர்ந்திழுக்கும் வண்ணம் அழகுற பளிச்சென்று வெளியே தெரிகின்றன. உங்கள் தேவைக்கேற்றபடி ஈரம் கசியாத ஒளி ஊடுருவும், பல வண்ண ரகங்களில் டிரேயான்ஸ் டிரேயோபேன் கிடைக்கிறது.



**ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

61, செம்புதாஸ் தெரு, சென்னை-1

தந்தி: CELYARN

தபால்பெட்டி நிர் 1736 போன் 20117 & 20118

*கிளைகள்:*

தபால் பெட்டி நிர் 253 சேலம்,

தபால் பெட்டி நிர் 154 மதுரை

தபால்பெட்டி நிர் 1372 கோயமுத்தூர்

இன்றைய இல்லத்தரசிகள் டிரேயான்ஸ் டிரேயோபேனுல் பாக் செய்யப்பட்ட பொருள்களையே விரும்பி வாங்குவதில் ஆச்சரியமென்ன இருக்கிறது.

NAS-120TM

# பிளேடு தயாரிப்பு முறையில் ஓர் புதிய முன்னேற்றம்

உலகத்திலே சிறந்த பிளேடுகளை தயாரிப்பதில் கையாளப்படும் மிக நவீனமும் ரகசிய தொழில் நுணுக்கமுமான பிரத்யேக முறையான "மல்டி பேஸட் லொரண்டிங் ப்ராஸஸ்" மூலமாக, முதன்முறையாக பனாமா ஒரு புதிய க்ஷவர பிளேடைத் தயாரித்து அளிக்கிறார்கள். அது மட்டும் அல்ல, உலகத்திலேயே வெகு சுகமாக க்ஷவரம் செய்யக் கூடியதும், நீண்ட நாள் நன்கு உழைக்கக்கூடிய பிளேடுகளின் இரு ஓரங்களில் மட்டுமே ரசாயனமுறையில் பூசப்படும் உயர்தர ரசாயனப் பொருளான "ஹைறடென்ஸிடி பாலி டெட்ரா ப்ளூரோ எதிலீன்" என்னும் கலவைப் பொருள் இப்புதிய பிளேடின் இரு ஓரங்களிலும் பனாமா தொழில் நுணுக்க முறை மூலம் பூசப்பட்டு இருக்கிறது.










PANAMA

SUPER SILVER
STAINLESS

EMA.FA.5.48

நிமித்தமாகத்தான் அதற்கு இருக்கப் போகிறாய்' என்றார். அதுபோல் நீங்கள் இங்கிருந்தாலும் உங்களோடு வாழ விடாமல் விதி என்னை வேறு விதமாகத் தடுத்திருக்கும். நான் தனிமையில் இருக்க வேண்டிய கர்மாவை அனுபவிக்கப் பிறந்தவள்....''

பதஞ்சலிக்கு இவ்வார்த்தைகள் தூக்கி வாரிப் போடுகிறது. மனத்தில் ஏதோ சிவகாமுவை நெருக்கத்தில் கொண்டு வருவதுபோல் தெரிகிறது. எவ்வளவு பாங்காகக் கீதையைக் காட்டுகிறாள்.

சங்கரனுக்கோ அவள் வார்த்தைகள் ஆறுதலாக இருக்கின்றன. ''சிவகாமு, எவ்வளவு பாங்காக எனக்கு ஆறுதல் அளித்துவிட்டாய்! கீதையெல்லாம் உன் அண்ணாவின் பாடமாக இருக்கும். இனி உன் அண்ணா நீ இல்லாமல் எவ்வளவு கஷ்டப்படப் போகிறாரோ!''

''அண்ணாவைப் பற்றி அப்படிச் சொல்லாதீர்கள். அண்ணா கீதையைக் கரைத்துக் குடித்தவர். ஆத்மா என்றும் சாவதில்லை, பழைய உடைகளைக் களைந்து விட்டுப் புதிய உடையை உடுத்துவது போல் ஆத்மா அழியாமல் உடலை மாற்றுகிறது. ஆத்மாவைக் காற்றோ, நீரோ, ஆயுதமோ, அக்கினியோ அழிக்கவே முடியாது என்ற கண்ணன் வார்த்தைகளை அவர் ஆணித்தரமாக உபந்நியசிப்பவர். அவருக்கா என் பிரிவுத் துயரம்? மேலும் நானா அவருக்குத் துணை? 'அனைத்தையும் விட்டு விட்டு என்னையே சரணடை' எனக் கூறிய கண்ணன் அல்லவா துணை? அவருக்கா தெரியாது?''

பதஞ்சலிக்குத் தவிப்பும் சுழற்சியும்... தலையைச் சுற்றுகிறது. கீதையின்வாக்கியங்கள் எதிரில் தோன்றுகின்றன. கீதையை அவர் உபதேசிக்கவில்லை. சகோதரியல்லவோ பேசுகிறாள். எத்தனை ஆழமாகக் கூறுகிறாள்!

வாசலில் டாக்ஸி வந்து நிற்கிறது. ஜக்கு இறங்குவான் என ஒருத்தரும் நினைத்திருக்கவில்லை. உள்ளே ஓடிய அவன் தாயை அணைத்துக்கொண்டு தவித்துப் போகிறான். ''அம்மா அம்மா, முதலியாரின் சகோதரி அறிந்து, அவள் சோபாவிடம் தெரிவிக்கும்வரை நீ எப்படியம்மா உன் உடம்பைப் பற்றி எழுதாமல் இருந்தாய்? நான் தவித்துப் போனேன். சோபாவுக்கு விமானத்தில் இடம் கிடைக்காததால் அவள் வரமுடியவில்லை. அங்கு அவள் கதறிக் கொண்டிருக்கிறாள். அம்மா....அம்மா எங்களை யெல்லாம் விட்டு விட்டுப் போய் விடாதே அம்மா....'' மகன் கதறுகிறான். அதே நேரத்தில் பக்கத்து வீட்டு ரவியும் சிவகாமுவுக்கு மருந்து வாங்கி வருகிறான்.

சிவகாமு மகனோடு ரவியையும் அணைக்கிறாள்.

''அம்மா, என்னைப் பார்க்க வேண்டுமென உனக்குத் தோன்றவே இல்லையா? ஏனம்மா எனக்குத் தெரியப்படுத்தாமலிருந்தாய்?''



''இந்தக் குமார் ஈஸிசேர் வாங்கினால் மூன்று பொருள்கள் இலவசம் என்றீர்களே! அவை என்னென்ன?''

''மடிப்பில் விரல் மாட்டிக்கிற சமயத்தில் உபயோகிக்க டிஞ்சர், பஞ்சு, பாண்டேஜ் துணி தருவோம்!''

சிவகாமுவுக்கு இப்போதும் புன்னகைதான். ''ஜக்கு, எனக்கு நீ எப்படியோ அப்படித்தான் இந்த ரவி போன்றவர்களும். இவர்கள் மூலம் என் குழந்தையைப் பார்க்கும்போது உனக்குத் தனிச் செய்தி எதற்கப்பா? எல்லோரையும் ஒரே சீராகப் பார்ப்பதில் ஆண்டவன் அருள் இட்டுமடா குழந்தாய்.''

அனைவரும் அவள் சொற்களைக் கேட்டு மேலாக ஆறுதல் மட்டும் அடைகின்றனர். பதஞ்சலிக்கு மட்டும் அவளுடைய சொற்களின் ஆழமும் கருத்தும் நன்றாகப் புலப்படுகின்றன. அவர் விக்கித்துப் போனார். அவருக்குச் சிவகாமுவின் வாழ்வின் இரகசியமே புரிந்துபோகிறது. ஜடமா அவள்? இல்லை...இல்லை. தன் மகனின் புகழ்ச்சியில் வசப்படாத உணர்ச்சி அவளது கலப்பு மணத்திலும் அவளை அணுக முடியாதபடி அவள் வென்று விட்டிருக்கிறாள். உலகத்தின் ஒவ்வொரு பொருளிலும் அவள் ஆத்மாவைக் கண்டிருக்கிறாள். அந்த ஆத்மா ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டது. அதனால்தான் ஊருக்கு உபதேசம் செய்து விட்டுத் துரோகியையும் மித்திரனையும் தனித் தனியாகப் பார்த்து வந்த அவரைப் போலில்லாமல், மீனாட்சிக்கு உதவியதைப் போல் சோபாவுக்கும் பாசத்தைத் தாண்டிய சித்தசையை அவளால் செய்ய முடிந்தது. தன் தியாகத்தினால் முன்னுக்கு வந்த பையன் தன் பேச்சைக் கேட்க வேண்டும் என அவர் கூவிய போது, அவளோ, 'பலனை எதிர்பாராது கர்மாவைச் செய்' எனக் கீதையின் சாரத்தை அவர் உபந்நியசித்ததை ஆழமாக ஏற்றிருக்கிறாள். 'நான்தான் செய்தேன்' என்ற அகம்பாவத்துக்கு இழுக்கப்பட்டுப் புகழுரைக்கும் பொருளுக்கும் அவர் வசப்பட்டபோது, அவள், 'நல்லது கெட்டது எல்லாமே ஆண்டவன்' என்று நம்பி யிருந்திருக்கிறாள்..... ஓ, இதையெல்லாம் அறிந்து கொள்ள முடியாமற் போய்விட்டதே...'

'ஆண்டவா, கீதையை அர்ஜுனனுக்கு உபதேசித்தது போல் சிவகாமுவுக்கும் உபதேசித்தாயோ?... ஆண்டவா, உன் கீதையில் செல்வம் என்கிற பணத்தைச் சம்பாதிக்கும் வழிக்குப் போனேன். அவளோ செல்வம் என்கிற மோக்ஷத்தைப் புரிந்து கொண்டு விட்டாளப்பா. அவளை நான் புரிந்துகொள்ளவில்லையே.....

'சிவகாமு! நீ கீதையை உடலாகவும், அதோட பொருளை உயிராகவும் வைச்சிண்டிருந்தே. கீதைங்கிற ஆதார இருசில் இருக்காமல் நான் அதன் சகடத்தில் சுத்திண்டிருந்தேன். நீயோ இருசை மட்டும் கெட்டியாகப் பிடிச்சுண்டு வாழ்க்கைச் சகடத்தில் சுத்தாம இருக்கக் கத்துண்டுட்டே. இருசை விட்டுட்டு நான் மாய சகடத்தைப் பிடிச்சுண்டேன். நீயோ மாயச் சகடத்தை விட்டுட்டு இருசைப் பிடிச்சுண்டே.' பதஞ்சலி மனத்தோடு கதறுகிறார்.

சோள மாவு அடையைக் கல்லிலே புரட்டிப் போட்ட செல்லாயி வாசற்புறம் நிழல் தட்டவே சட்டுவத்தைக் கீழே போட்டு விட்டு ஒரு கையை இடுப்பிலும் மறு கையை நெற்றி மேட்டிலுமாக வைத்துக் கண்களை இடுக்கிக் கூராக்கிக் கொண்டு எறிட்டு நோக்கினாள். கவிந்து சூழ்ந்திருக்கும் மேகத் துணுக்குகள் பகலையே அல்லவா இரவாக்கி விடுகின்றன ?

கையிலே சிறு பையும் நெஞ்சிலே சிறு தயக்கமுமாக வாசற்படியிலே நிற்கிற உருவம், முதலில் புகை ஓவியமாய்ப் பிறகு தெளிவான வரி வடிவமாய்ப்.... பிறகு..... பிறகு செல்லாயிக்குப் புரிந்து விட்டது.

சில்லிப்பாய் ஒரு கணம் உடலே அதிர்ந்து குலுங்கி விட்டது. நெஞ்சத்தின் பூரண உணர்வும் ஒன்றாய்க் கூடி, ''வாங்க'' என்று அழைக்கும் முகமாக — அப்படி ஓர் ஆவலான வரவேற்புக்கு அவள் இதயத்தின் இருக்கதவம் திறந்தபோது நாவு மட்டும் சலனமற்று நின்று விட்டது.

ஆவலின் ஓட்டத்துக்குப் பெரிதாய் ஒரு தடை கல். ஒரு கணம் அவனைத் தீர்க்கமாய் நோக்கிவிட்டுச் சட்டென்று திரும்பிக் குனிந்து சட்டுவத்தை எடுத்துச் சோள அடையை மறுபடியும் புரட்டிப் போட்டு எடுத்துத் தாலத்தில் போட்டு விட்டு, எண்ணெய் தடவி இரண்டு கரண்டி மாவை எடுத்து அடைக் கல்லில் விட்டு வட்டமாய்த் தடவினாள்.

அடையின் மணம் கம்மென்று கிளம்பி வந்து வாசற்படியில் நிற்கும் தங்கையாவின் மூக்கில் நுழைந்தது. அதை ரசனையாக ஏற்கும் நிலையில் அவன் இல்லை.

வாசற் படியேறி வந்து நிற்கும் அவனைப் பார்த்தபின் பும்கூட 'வா' என்று வாய் திறந்து அழைக்காமல் போய் விட்ட — என்னால் மறக்க முடியவில்லை. எல்லாமே இன்னும் என் நினைவில் இருக்கிறது என்கிறாற்போல் போய்விட்ட — செல்லாயியை எண்ணி, உள் வாங்கி அழுதான் தங்கையா. அவளின் இந்த நெடு மௌனம் அவனை என்னவோ செய்கிறதே !

அட்டை பிடுங்கித் தின்னும் இந்த மலைக் காட்டுக்கு ஏழு மைல் நடந்தே வந்தவனுக்கு மனைவி வழங்குகிற வரவேற்பா இது? வரும் வழியிலேயே காலைப் பதம் பார்த்த அட்டைகளைப் பிடுங்கிப் பிடுங்கி எறிந்து, குருதி பீறிட்ட இடங்களில் பிடித் தாளை ஒட்டி ஒட்டி..... பரிபவப்பட்டு அவன் வந்திருக்கிறான். அவளோ இன்னமும் மூச்சைப் பறிக்கவில்லைபோல் 'கம்'மென்று இருக்கிறாள்.

திரும்பிவிடலாமா என்ற எண்ணம் உள் மனத்தில் இலேசாய் அரும்பிய போது, அவள் ஒரு பித்தளைப் போணி நிறையச் சுடு தண்ணி ருடன் வந்து அவன் அருகில் வைத்து விட்டுப் போய் விட்டாள்.

தங்கையா அசையாமல் நின்றான்.

செல்லாயி ஒரு கணம் திரும்பி நின்று அவனையும் போகணியையும் அர்த்தச் செறிவோடு நோக்கி விட்டு உள்ளே நடந்தாள்.

அவளின் இந்த மௌனமான வரவேற்பையும், உள் அந்தரங்கப் பேழையைத் திறந்து அன்பு கனிவதையும் அவனால் புரிந்து கொள்ள முடிந்தது. விருட்டென்று உள்ளே சென்று கைப் பையை ஓர் ஆணியில் மாட்டிவிட்டுப் போகணி நீரை எடுத்துக் கைகால் கழுவலானான். இந்த மலை தேசக் குளிருக்குச் சுடுநீர் எத்துணை இதமானது !

ஒரு வெண்கலத் தாலத்தில் நாலு சோள அடையையும், தொட்டுச் சாப்பிடச் சேனைக் கீரை மசியலையும் அவன் முன் வைத்தாள். ஓர் அலுமினியத் தம்ளரில் கடுங் காப்பியையும் வைத்தாள். இங்கு பால் ஏது? பால் இல்லாத கருப்புக் கட்டிக் காப்பிதான்.

அவன் வருவான் என்று அவளுக்கு ஜோசியம் தெரியாது. ஆனாலும்கூட அன்றைக்கு என்று அவனுக்கு மிகவும் பிடித்தமான ஏலம் மணக்கும் சோள அடையையும் சேனைக் கீரை மசியலையும் செய்தது தான் சந்தர்ப்பம் என்பதோ?



சுடச் சுட மேலும் இரண்டு அடைகளையும் ஒரு டம்ளர் காப்பியையும் குடித்து ஏப்பம் பறித்த போது, வயிற்றைப் போலவே இதயமும் நிறைந்தே காணப்பட்டது.

மாலைப் பொழுதும் மெல்ல நழுவி இருளின் ஆளுகையும் தொடங்கிவிட்டது. இங்கு மின்சார வசதி இல்லை. எல்லாக் குடில்களிலும் சிம்னி ஒளி மின்மினிப் பூச்சி போல் மினுக்கலாயிற்று. காய் தேய்க்கிற கங்காணி ஆபீஸ் அரிக்கேன் லாந்தரை ஏற்றிக் கொண்டு போய், ஆபீஸ் முன்னால் நிற்கிற விளக்குத் தூணில் மாட்டி விட்டான். சரியாக மணி ஆறரை. ஆபீஸ் சுவர்க் கடிகாரம் ஒரு முறை அடித்து ஓய்ந்தது.

மத்தியானம் இரண்டு மணிக்கே வந்து விட்ட கணவனிடம் இன்னும் ஒரு வார்த்தை கூடப் பரிமாறவில்லை. அவ்வளவு கடினமாய் மனத்தை இறுக்கிக் கொண்டிருந்தாள் அவள்.

சுடச்சுடச் சோற்றையும் கருவாட்டுக் குழம்பையும் வட்டித்தபோதுகூட அவள் பேசி விடவில்லை. அவளின் இந்தப் பூதாகாரமான மௌனம் தங்கையாவைச் சுமையாக அழுத்தியது. தன்னை இன்னும் அவள் ஏற்கவில்லையே என்கிற தாபம் பொங்கி வழிந்தது.

அவனோ சிம்னித் திரியை இறக்கி மங்கலாய் எரியும்படி விட்டு விட்டுத் தலைக்கு ஒரு துணிப் பொட்டலத்தையும் வைத்துக் கொண்டு ஒரு கிழிந்த சேலையை நாலாய் மடித்து விரித்துக் கொண்டு படுத்துவிட்டாள். பகல் ஒரு மணி வரையில் ஏலம் பறித்த களைப்பு உடலை அசத்தினாலும்கூட நினைவு மட்டும் அயராமல் எழுந்தது.

அவள் வழக்கமாக விரித்துப் படுக்கும் கம்பளியையும் எண்ணெய்ப் பிசுக்கேறிய 'அந்த'த் தலையணையையும் அவனுக்கு என்று போட்டு விட்டு, நடுக்கும் குளிரையும் பொருட்படுத்தாது கிடந்தாள். அது அவர்கள் திருமணத் தலையணை. முன்பு அவர்கள் இருவர் தலைகளையும் ஒருசேரத் தாங்கிய தலையணை. சிறிது காலமாய் அவனை மட்டும் தாங்கிய தலையணை. இன்று....?

சிவசைலமலை எஸ்டேட்டுக்கு அவள் ஏலக்காய் பறிக்கும் பணிமகளாய் வந்தாள். பிறகு அவள் தங்கையாவின் மணமகளாய் ஆகி விட்டாள்.

இருவருமே நன்றாக உழைத்தார்கள். உற்சாகமாக வாழ்ந்தார்கள். வாரச் சீட்டு, மாதச் சீட்டு என்று போட்டுக் கம்மல், மூக்குத்தி ஒற்றை வடச் சங்கிலி எல்லாம் வாங்கினார்கள். செல்லாயிக்குப் பரம ஆனந்தம். எவருமே பெறவியலாத கணவனைத் தான் மட்டும் பெற்றுவிட்டதாக எண்ணிப் பூரித்தாள்.

# கவிழ்ந்த பால்

உமாகல்யாணி

அப்போதுதான் அந்த இறுமாப்பில் விழுந்தது ஓர் இடி. பேரிடி. அவளால் தாங்கவே இயலாத இடி. எஸ்டேட் ரைட்டரின் மைனர் செயின் காணாமற் போய்விட்டது என்று முதலில் செய்தி. தங்கையாவே அதை எடுத்தவன் என்பது மறு செய்தி.

செய்தி கேட்டவுடன் செல்லாயி பதறவில்லை. தன்னைத் தொட்டுத் தாலி கட்டிய கை, ஒரு திருட்டுக் கை அல்ல என்பது அவளின் ஓங்கலான தீர்மானம்.

ஆனால்...

அவன் திருடனே என்பது நிரூபணம் ஆனவுடன் நிலை தகர்ந்து போய்விட்டாள்.

அதன் பிறகு அவனுக்கும் அவளுக்கும் இடையே ஒரு விரிசல் மெல்லியதாய் விழ

ஆரம்பித்து விட்டது. அந்த விரிசல் அவளுக்குத் தாங்கமுடியாததாகத் தானிருந்தது.

''தங்கையா உன் புருஷன்தானேம்மா?'' என்று போலீஸ் கேட்டபோது மனம் குமுறிய செல்லாயி, ''ம்...ஒரு காலத்தில்...'' என்று கூறிவிட்டு அழுகை வெடிக்கும் விழிகளைத் திருப்பிக்கொண்டு விட்டாள். அத்துடன் இதயத்தையே திருப்பிக் 'கொண்டு விட்டாளோ?

யாரோ வந்து சொன்னார்கள், அந்த வழக்கிலே அவள் கணவனுக்கு மூன்று வருடத் தண்டனை என்று. போனவன் போனவன் தான். ஆறு ஆண்டுகள் உதிர்ந்து விட்டன.

இப்போது.

மறுபடியும் மனைவியைத் தேடிக் கணவன் என்கிற உறவை நிலைநாட்ட வந்திருக்கிறான் போலும்.

செல்லாயியும் ஒரு பெண்தானே! கால வளர்ச்சியிலே பள்ளம் விழுந்த மனம் நிரவியிருக்காதா? ஆசை இல்லாமலா வாங்க என்று வாய் வார்த்தை கூறிவிட்டாலும் வயணமான சாப்பாட்டைப் போட்டாள்? என்றாலும் தங்கையாவை ஏற்கத் தயக்கம் இருக்காதா? விடிந்த பொழுதிலே தயக்கத்தையெல்லாம் உதறிவிட்டு ஏற்றுக்கொண்டு விடமாட்டாளா? அதற்கு இந்த இரவு ஒரு வழி கோலலாமே!

கவிழ்ந்த பாலை அள்ள முடியாது. இனி மேலாவது கவிழாமல் பார்த்துக் கொள்ளலாமே?

சிறையிலிருந்து திரும்பிய தங்கையா திருந்திய மனத்தோடு திருடனாக அல்லாமல் பாளையங்கோட்டையில் ஒரு கடையில் வேலை பார்ப்பதாகவும் செவி வழிச் செய்தி எட்டியது. எனவே திருந்திய கணவனை ஏற்க அவள் தயாராகவே இருந்தாள்.

தனது மணிக்கழுத்தில் பொன் சரட்டைப் பூட்டிய கரங்கள் பிறர் கழுத்தின் சரம் பறிக்கும் கயமைக் கரங்களாக மாறிவிட்ட கொடுமையை அவளால் தாள முடியவில்லை.

[illegible] தன் கணவன் திருடன் அல்ல. புது வடிவு பெற்றவன் என்பதை இப்போது உணர்கையில்...அவள் காதல் மனம் குளிர்ந்து, குளிர்ந்தது. ஆனாலும் சிறு தயக்கம் ஏற்பட்டது.

விடியட்டும்.

அவள் அவனை ஏற்றுக் கொள்வாள். மனத்தின் பொருமல்கள், தயக்கங்கள் எல்லாம் அழிய வேண்டாமா?

தங்கையாவுக்கும் ஒரே சிந்தனைதான். இது வரை அவள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே என்கிற ஆதங்கம்தான். தன்னை இன்னும் ஏற்பாகக் கொள்ளவில்லையே என்கிற தாபம்.

விடிவிளக்கின் மெல்லொளியில் கணவன் ஒரு புறமும் மனைவி ஒரு புறமுமாகச் சிந்தனையின் முக்குளிப்பில், உணர்வுகளின் எழுச்சியில் ஆழ்ந்து கிடந்தனர்.

அவளின் சலனமற்ற நிலையில் வரிவடிவமாய், நிழலாய், எழிலாய் விழும் சயன நிலையில் — அவன் கிறங்கிப் போய்விட்டான். ஆறு ஆண்டுகள் அவளுடன் துயின்ற உணர்வுகள் சில்லரும்புகளாய் மலரத் தொடங்கின.

ஒரே தலையணையை இருவருமாய்ப் பகிர்ந்து கொண்ட இன்ப நினைவலைகளில் நினைவு பாய்ந்தது.

அவன் அவளுக்காக, அவளைப் போலவே இதுவரை தூய்மையாய் இருந்து வந்திருக்கிறான். உணர்வின் விழிப்பில் உத்வேகமுடன் எழுந்து... ஒரு தயக்கமாய்... மறுபடியும் தனது படுக்கையில் விழுந்தான்.

அவனின் இந்தத் நிலையை ரசித்து...அவன் வரவினை ஆவலோடு எதிர்பார்த்து... அவனின் சங்கமத்தை அவளும்தான் விரும்பினாள்.

பாழும் தயக்கங்கள் இருவரையும் ஒன்ற விடாமல் அடித்தனவே. திருந்தி விட்டான் என்று எண்ணியதுமே அவனை மானசீகமாய் ஏற்றுவிட்டது. எனினும் அவளை வலிய எப்படிப் பேசுவான்? அவனோ, 'ஏதாவது பேசி ஏடாகூடமாய்ப் பதில் வந்தால்...?' என்று தயங்கினான். எனவே ஆசைகள் தயங்கி நின்றன. இரண்டுமே எப்போது கட்டுடையுமோ?

சட்டென்று எழுந்தான் தங்கையா. அவன் காலடிகள் தன்னை நெருங்கும் கணத்தை அதி ஆவலாய் எதிர்பார்த்துக் கண் மூடிக் கிடந்தாள் செல்லாயி. ஆனால்... ஆனால்... காலடிகள் விலகித் தன் சேமிப்பெல்லாம் இருக்கும் தகரப் பெட்டியருகே செல்வதை உணர்ந்து திடுக்கிட்டாள். பெட்டி திறக்கும் ஒலி கேட்டது!

'சை! மனைவியிடமே திருடத் துணிந்த இவனும் ஒரு கணவனா?' என்று எண்ணிப் பதைபதைத்தாள். மனம் கூசிப் போனாள்.

கணவன் திருந்தவே இல்லையா?

அவள் உணர்வுகள் நாண் பூட்டின. கவிழ்ந்த பாலை அள்ளப் போவது போன்ற முட்டாள்தனம்தானோ, அவன் திருந்திவிடுவான் என்று நினைப்பதும்? இனி ஒருநாளும் அவன் திருந்தவே மாட்டானோ? ஏமாற்றங்களின் ஒருசேர்ந்த கனம் நெஞ்சம் சிதறிவிட்டது. நினைப்பதற்கு இனி எண்ணங்கள் இல்லை என எண்ணிப் போனாளோ? நாண் பூட்டிய உணர்வின் திமிறலில் அதை ஆள முடியாமல் அடங்கி ஒடுங்கி விட்டாள்.

ஆனால் அவளின் சாவை உணராத தங்கையாக இருளில் வெளியேறி நடக்கலானான். தான் நேர்மையாக ஈட்டிய பணத்தைத் தன் மனைவியின் கையிலே கொடுத்து மகிழ வந்தவன் அவளின் நெடிய மௌனத்தை — அதன் உட்பொருளை அறிய முடியாமல்....

அவள் இன்னும் மாறவில்லை. காலமாவது மாற்றட்டும் என்று எண்ணித் தன் சேமிப்பை எல்லாம் அவள் பெட்டியிலே போட்டுவிட்டுப் பாளையங்கோட்டை போய் விவரமாக ஒரு கடிதம் போடலாம். தன்னைப் புரிந்துகொண்டு 'வா' என வரச் சொல்லிக் கடிதம் போட்டாளானால் ஓடோடி வரலாம் என்று நினைவிலே ஏந்தி அவன் போனான்.

பாவம்! இருவருமே அவசரப்பட்டு விட்டார்கள். விடியும்வரை இருவரும் காத்திருக்கலாம். அவளை அவன் புரிந்து கொண்டிருப்பான். அல்லது அவன் போனாலும் கூட அவளாவது பெட்டியைத் திறந்து பார்த்த பிறகு புரிந்து கொண்டிருப்பாள்.

ஹூம்... என்ன செய்வது?

# வளரும் அவன் தேவைகளை உங்களால் சமாளிக்க முடியுமா?

ஆண்டுக்கு ஆண்டு அவன் வளர வளர அவனுடைய தேவைகளும் வளர்ந்துகொண்டே போகும். இளமைப் தேவைகளைவிட காளைப்பருவ தேவைகள் அதிகமாகும். கல்லூரிப் படிப்பிற்கு, தொழிற் பயிற்சிக்கு அவனுக்குப் பணம் தேவைப்படும். அப்பொழுது பணத்திற்கு உங்களைத்தானே எதிர்பார்ப்பான். அதற்கு நீங்கள் வழிவகை செய்திருக்கிறீர்களா? உங்களுக்கு வேண்டிய பணம் எங்கிருந்து கிடைக்கும்?

எல் ஐ சி வழங்கும் கல்வி ஆண்டுத் தொகைப் பாலிசி உங்களுக்குக் கைகொடுக்கும். நேரம் வரும்போது பார்த்துக் கொள்ளலாம் என எண்ணி பின்னும் சிரமப்படுவதைவிட இன்றே செயல்படுங்கள்—இன்ஷ்யூர் செய்யுங்கள். உங்கள் மகனின் எதிர்காலம் குறித்து கவலைப்படாமல் இருக்கலாம். உங்கள் ஆயுள் இன்சூரன்சுத் தேவைகளுக்கு ஒரு எல் ஐ சி முகவரோடு தொடர்பு கொள்க. மகிழ்ச்சியோடு உதவுவார் அவர்.



ஆயுள் இன்சூரன்சு
போல ஆதரவு தருவது
எதுவுமே இல்லை.

PRATIBHA 332-1-TAM



## தனிப்பெருந் தலைவர்களுக்கான தலையாய கார்

இப்படத்தில் காணப்படும் கார், உலகில் பதினெட்டு பேர்களிடம்தான் இருக்கிறது. 'ஆர்டர்' கொடுத்தால்தான் செய்து தரப்படும். ஒரு காரின் விலை நான்கு லட்சம் ரூபாய்!

ஜெர்மனியில் டெய்ம்லர் - பென்ஸ் கம்பெனியார் இக்காரைத் தயாரித்த போதிலும், ஜெர்மனியில் எவருக்கும் விற்கப்படவில்லை. ஜெர்மன் அரசு, வெளிநாட்டுத் தலைவர் எவரேனும் வரும்போது, 'லாண்டாவுலெட்' எனப்படும் இக்காரை வாடகைக்கு அமர்த்திக் கொள்கிறது.

போப்பாண்டவர், மாசேதுங், யூகோ அதிபர் டிட்டோ, ஈரான் மன்னர், தாய்லாந்து மன்னர் ஆகியோர், இக்கார் வைத்திருப்போர்களில் குறிப்பிடத்தக்கவர்.

நான்கு லட்சம் ரூபாய் கொடுத்து வாங்குகிறவரின் விருப்பத்துக்கு ஏற்ப இக்கார் விசேஷமாகத் தயாரிக்கப்படும். ஏழு பேர் முதல் எட்டு பேர் வரை இக்காரில் சொகுசாக அமரலாம். சுமார் இருபது அடி நீளமுள்ள இக்காரில் நான்கு அல்லது ஆறு கதவுகள் இருக்கும். டெலிபோன், டேப் ரிக்கார்டர், ஏர்கண்டிஷன் சாதனம் ஆகியவையும் உண்டு. - யூ. பி. எஸ்.

---

விண்வெளி வீரர்களின் உபயோகத்துக்காக ஒரு பால்பாயிண்ட் பேனா தயார் செய்திருக்கிறார்கள். இது சுமார் நூறு ஆண்டுகள் வரை எழுதிக் கொண்டே இருக்கும். - வீக்கெண்ட் - பாபு



---




விளையாட்டுக்களில் உபயோகப்படும் 'லவ்' என்ற வார்த்தைக்கும், 'Love' என்ற ஆங்கில வார்த்தைக்கும் தொடர்பு துளிக்கூடக் கிடையாது. பூஜ்யம் என்ற பொருளுள்ள 'முதல் லவ்' பிரஞ்சு மொழியைச் சேர்ந்தது. -- தேஜ்

## 8 ε3 8

"எட்டில் பாதி எவ்வளவு?"

"எந்தப் பாதி?"

"எந்தப் பாதியா?"

"ஆமாம், நீள வாட்டில் பாதி மூன்று, அகலவாட்டில் பாதி பூஜ்யம்."

- 'ஜெயந்தி'

---

மழைக் காலத்தில் பிடித்துச் செல்லும் குடைகளிலும் விளம்பர முகம் காட்டி வைத்திருக்கிறது. மழையில் அழியாத வண்ணம், பல நிறுவனங்களின் விளம்பரங்கள் — ஒரே குடையின் மேல் பிரகாசிக்கின்றன!

இந்தக் குடை விளம்பரத்தை முதன் முதலாக ஸ்வீடனில்தான் தொடங்கினார்கள்.

1968ல் 'ஸ்காண்டிநேவியன் மார்க்கெட்டிங் அண்ட் அட்வர்டைஸிங்' மாநாட்டின் போது 1200 குடைகளை விளம்பரத்துடன் விநியோகம் செய்தார்கள்.

ஆதாரம்: 'அட்வர்டைஸிங் ஏஜ்'
தகவல்: ஏ. சுவாமிநாதன்



---

நியூயார்க் நகரில் உள்ள ஒரு கம்பெனி, புதுவிதமான தர்மாமீட்டர் ஒன்றைத் தயாரித்திருக்கிறது. காகிதத்தினால் ஆன இதில் பிளாஸ்டிக் பூச்சு பூசப்பட்டிருக்கிறது. இந்தப் பிளாஸ்டிக் தகட்டில் எண்கள் எழுதப்பட்டிருக்கின்றன. அந்த எண்கள் ஒவ்வொன்றின் மீதும் மிக லேசான உஷ்ணத்தில் உருகிவிடும் ஓர் உலோகம் பூசப்பட்டிருக்கிறது. தர்மாமீட்டரை நோயாளி வாயில் வைத்துக்கொண்டதும் அதிலுள்ள எண்களின் மீது பூசப்பட்டுள்ள உலோகம் கிடுகிடுவென்று உருகிக் கொண்டே வரும். உதாரணமாக ஒருவரின் உடல் உஷ்ண நிலை 102 டிகிரி என்றால் முதலில் 99 என்ற எண்ணின் மீது பூசப்பட்டுள்ள உலோகம் உருகும். உடனே கிடுகிடுவென்று 100, 101, 102 ஆகிய எண்களிலும் உலோகம் உருகி விடும். அதன் பிறகு உள்ள எண்களில் உலோகம் உருகாது. இப்படி உலோகம் உருகும் எல்லையைக் கொண்டு உஷ்ணத்தைக் கணக்கிடலாம். இந்தத் தர்மாமீட்டர் வைத்து ஒருவரின் உடல் உஷ்ணத்தைப் பத்து விநாடிகளில் கண்டுபிடித்து விடலாம். ஒருமுறை உபயோகித்ததும் தர்மாமீட்டரைத் தூக்கி எறிந்துவிடலாம்.

ஆதாரம்: "நியூஸ் வீக்" தகவல்: சரோஜா ராமச்சந்திரன்



# காஷ்மீரமும் காசுமாலையும்

ராமப்ரியா.

என் பெண் கவிதாவின் கலியாணத்துக்கு எண்ணினாற்போல் இருபது நாட்களே இருந்தன. நாட்கள் நெருங்க நெருங்க மனம் அர்த்தமில்லாத பயத்தினால் கலங்கிக் கொண்டேயிருந்தது. கல்யாணப் பெண் கவிதாவோ தன்னை மறந்த நிலையில் சதா கனவுலகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தாள். பாவம், சிறிசு. மனத்தில் பல இன்பக் கனவுகளும் ஆசைகளும் தோன்றும் பருவம். அவளைப் பார்த்துப் பூரிக்கக்கூடிய நிலையில் நான் இல்லையே என்றுதான் வருத்தமாக இருந்தது. பெண்களாகப் பிறக்கவும் கூடாது, பெண்களைப் பெறவும் கூடாது என்கிற வேதாந்த நிலையை எட்டிக் கொண்டிருந்தேன்.

எனக்கு முற்றிலும் மாறாக என் கணவர் மகிழ்ச்சியே உருவாக வளைய வந்து கொண்டிருந்தார். அவருக்குக் கவலைப்படவே தெரியாது. எல்லாப் பொறுப்பையும் 'அவன்' ஏற்றுக் கொள்வான் என்ற திட நம்பிக்கையுடன் எதையும் இலேசாகவே நினைக்கும் சுபாவம். நிமிஷத்துக்கு நிமிஷம் பெண்ணை உற்சாகப் படுத்துவது ஒன்றுதான் அவருடைய குறிக்கோளாக இருந்தது.

பெரியவர்கள், இருதரப்புப் பெற்றோரும், ஜாதகப் பரிவர்த்தனை செய்து முறைப்படி பெண் பார்த்து நிச்சயம் செய்த கலியாணம் தான் இது. பிள்ளை குமாரின் பெற்றோர் வடக்கே இருந்ததனால் பிள்ளையைப் பெண் பார்க்க அனுப்பி யிருந்தனர்.

பெண் பார்க்கக் குமார் காரிலிருந்து என் கணவரோடு இறங்குவதை உள்ளே ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். பையன் நல்ல அழகன் என்று என் மனம் கூறியது.

சம்பிரதாயமான சடங்குகள் முடிந்தன. ஹாலில் மௌனம் நிலவியது.

" உனக்குக் கர்நாடக சங்கீதம் பிடிக்குமா ?" என்று நேராக அவளிடம் ஆங்கிலத்தில் கேட்டார், மாப்பிள்ளை. முதல் கேள்வியே என்னைத் தூக்கிவாரிப் போட்டது. ஏனென்றால், கவிதா முழுக்க முழுக்க 'கான்வெண்டி'ல் படித்தவள். கர்நாடக சங்கீதமே பிடிக்காது.

பதில் பேசாமல், "ஊஹூம்!" என்று தலையை மட்டும் ஆட்டினாள் கவிதா.

"ரொம்ப நல்லது. எனக்கு ஹிந்தியும் ஆங்கிலப் பாட்டுக்களும் பிடிக்கும்!" என்று சிரித்தபடி சொன்னார் குமார்.

ஒருவித தெம்புடன் கவிதா முதல் தடவையாக அவரை நிமிர்ந்து பார்த்தாள். இருவர் கண்கள், மனம் எல்லாம் அந்தச் சில விநாடிகளில் பேசிக் கொண்டிருக்கக் கூடும்.

"எனக்கும்கூட!" என்றாள் கவிதா முக மலர்ச்சியுடன். அவ்வளவுதான்! அவர்கள் இருவரும் தங்களை மறந்து, தங்கள் சூழ்நிலையை மறந்து கலகலவென்று பேசத் தொடங்கி விட்டார்கள். குமார் கேட்டதற்கெல்லாம் முகமலர்ச்சியுடன் கவிதா பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். சில சமயம் அவளேகூடக் குறும்புடன் ஓரிரண்டு கேள்விகள் கேட்கவும் செய்தாள். ஏதோ பல வருஷங்கள் பழகிய மாதிரி, தவறு — பல ஜன்மங்கள் பழகிய மாதிரி பேசினார்கள். கவிதாவின் வெட்கம் போன இடம் தெரியவில்லை. இனிமேல் நமக்கு இங்கு வேலையில்லை என்று கருதி நான் உள்ளே போனேன்.

மாப்பிள்ளைப் பையன் ஊருக்குப் போகுமுன் கவிதாவிடம் நெருங்கி வந்தார். அவள் தோளை சுவாதீனமாகத் தொட்டு, "நான் கடிதம் எழுதினால் பதில் போடுவாயா?" என்று தைரியமாகக் கேட்டார். திடீரென்று அவளைத் தொட்டவுடன் என் பழங்கால உடல் நடுங்கிற்று. கவிதா களங்கமற்ற சிரிப்புடன் தலையை ஆட்டினாள்.

குமார் எங்கள் பக்கம் திரும்பி, "இதில் உங்களுக்கு ஆட்சேபணை ஒன்றும் இராது என்று நினைக்கிறேன்.....?" என்றார். இருவரும் தீர்மானம் செய்துவிட்ட பிறகு எங்கள் அனுமதி எதற்கோ? நாங்கள் அசட்டுச் சிரிப்புடன் அனுமதி கொடுத்தோம்.

பெண் பார்க்கும் படலம் இப்படி நூதன முறையில் நடந்தேறியது. மேற்கொண்டு ஆகவேண்டிய விஷயங்களில் நாங்கள் மும்முரத்துடன் ஈடுபட்டிருக்கும் போதுதான் குமாரும் கவிதாவும் கடிதப் பரிவர்த்தனையில் முழுமூச்சுடன் இருந்தார்கள்.

தபால்காரன் தவறாமல் கவிதாவிடம் குமாரின் கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போவான். உடனே அகமும் முகமும் மலர என் கணவர், "என்னம்மா, எழுதியிருக்கிறார்?" என்று பரிவுடன் விசாரிப்பார், பெண்ணை. எனக்கு இருக்கும் கவலை விசாரங்களில் இவற்றை ரசிக்கவே முடியாது.

"அப்பா ! அவர் கலியாணம் முடிந்தவுடன் தேன்நிலவுக்குக் காஷ்மீர் போகலாமா?' என்று கேட்டிருக்கிறார்" என்று மகிழ்ச்சி பொங்கச் சொன்னாள் கவிதா. எங்கள் இருவருக்கும் அதைக் கேட்டவுடன் உற்சாகம் கரை புரண்டு ஓடியது.

"நல்ல யோசனை ! 'கட்டாயம் போகலாம்' என்று எழுதிவிடம்மா! பார்க்க வேண்டிய அழகான இடம். இந்த வயதில் அநுபவிக்காமல் வேறு எப்பொழுது பார்க்கப் போகிறாய்? அவரும் கைநிறைய சம்பாதிக்கும் இளைஞர். தேதியை மட்டும் சரியாக எனக்குச் சொன்னால் நான் இங்கேயே ரிசர்வ் செய்து விடுகிறேன். எனக்குத் தெரிந்த ரயில்வே அதிகாரி மூலமாக. 'கூப்பே' ரிசர்வ் செய்வது கஷ்டமே இல்லை. உடனே எழுது!" என்று பொரிந்து கொட்டினார். அவருக்கு இருந்த உற்சாகமிகுதியில் அவர் ஆனந்தக் கூத்தே ஆடிவிட்டார்.

நாலைந்து நாட்கள் விநாடிகளாகச் சென்றன. கலியாணத்துக்குச் சரியாகப் பதினைந்து

நாட்களே இருந்தன. எதிர்பார்த்த அளவு பண வசதி பூரணமில்லை. எதைக் குறைப்பது, எதை நிறைப்பது? துண்டு விழுவதை எப்படிச் சமாளிப்பது என்று இருவரும் தத்தளித்துக் கொண்டிருந்தோம்.

''அப்பா! அவர் காஷ்மீர் போகச் சம்மதித்து விட்டார். கலியாணம் ஆன மறுநாளே உனக்குத் தெரிந்த ரயில்வே அதிகாரியின் மூலமாக எங்கள் இருவருக்கும் இடம் 'ரிசர்வ்' செய்து விடச் சொல்லி விட்டார்!'' என்று மகிழ்ச்சியுடன் சொல்லிவிட்டு மீதி எழுதி யிருப்பதைப் படிக்க உள்ளே ஓடி விட்டாள் கவிதா.

''ரொம்ப சரி! இப்போதே சென்டிரலுக்குப் போய் ஆக வேண்டியதைக் கவனிக்கிறேன்!'' என்று பெண்ணின் உற்சாகத்துக்குச் சற்றும் குறையாமல் சொல்லிவிட்டு உள்ளே போய்ச் சட்டையை மாட்டிக் கொண்டு வந்தார். மறுபடியும் உள்ளே போனார். வெளியே வந்தார். குட்டி போட்ட பூனை மாதிரி இவர் சுற்றுவதைக் கண்டதும் முதலில் நான் ஆச்சரியப்பட்டாலும் சில விநாடிகளில் எனக்கு விஷயம் விளங்கிவிட்டது. சிரிப்பைச் சிரமப்பட்டு அடக்கியவாறு பேசாமல் அவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவருக்குப் புதிதாக முளைத்த கவலையெல்லாம் எந்தப் பணத்தைக் கொண்டு டிக்கெட் வாங்குவது என்பதுதான். எல்லாவற்றுக்கும் கணக்காகத்தான் இருந்தது. சில அயிட்டங்களுக்குச் சில இடங்களில் பணத்தை எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தோம். இந்த அழகில் இருவருக்கும் ஐந்நூறு ரூபாய்க்கு மேல் காஷ்மீர் பயணத்துக்குச் செலவழித்து விட்டால் துண்டு விழும் தொகையை எப்படிச் சமாளிப்பது என்பதுதான் அவருடைய புதிய பிரச்னை.

''ஏதாவது யோசனை சொல்லேன். சோமுன் பிரம்மஹத்தி மாதிரி என்னையே இப்படி விறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தால்?'' என்று என்மேல் திடீரென்று பாய்ந்தார். எனக்குச் சிரிப்பு, கோபம் எல்லாம் போய் நிஜமாகவே அவர் மீது கோபம்தான் வந்தது.

''நான் ஒன்றும் அப்படிப் பார்க்கவில்லை. என்னை அடியிலிருந்து ஏதாவது யோசனை கேட்டிருந்தாலல்லவா இப்போது கேட்பதற்கு? அவர் உங்களை முதலிலேயே ஏதேனும் உதவி கேட்டாரோ? சிறிசுகள் எழுதிக் கொள்ளும் கடிதங்களை நீங்களாகத் தூண்டித் துருவிக் கேட்டுத் தெரிந்து கொண்டீர்கள். நீங்களாகவே வலுவில் உங்கள் தலையில் அக்ஷதையைப் போட்டுக் கொண்டு நாளுக்கும் ரிசர்வ் செய்வேன் என்று பீற்றிக் கொண்டீர்கள். பண விஷயம் என்று வரும்போது பின்னுக்குப் போகிறீர்கள். சொன்ன வாக்கை நிறைவேற்றப் பேசாமல் போய் டிக்கட்டை 'புக்' பண்ணிவிட்டு வாருங்கள்!'' என்றேன், படபடப்பாக.

''நான் எனக்குத் தெரிந்த ரயில்வே அதிகாரி மூலமாக ரிசர்வ் செய்யத்தான் ஒப்புக் கொண்டேனே தவிர பணத்தை நான் கொடுப்பதாகச் சொல்லவில்லையே? இப்போது யாரிடம் எப்படிப் பணத்தைக் கேட்பது?'' என்று உரத்த குரலில் கூவினார்.

''கத்தினால் சரியாகப் போச்சா? நான் வேண்டுமானால் உங்கள் கத்தலுக்குப் பயப்படலாம். மாமனார் ரிசர்வ் செய்கிறார் என்றால் பணம் இல்லாமல் என்று எந்த மாப்பிள்ளை நினைப்பார். அவர் மேல் தப்பேயில்லை. வீணாக வாயைக் கொடுத்துவிட்டுப் பின்வாங்கினால் பிறகு நம்ம தலைதீபாவளி காக மாலைச் சண்டை மாதிரிதான் முடியும்!'' என்று அழுத்தமாகச் சொன்னேன். கடைசி



யில் சொன்னது அவருடைய கோபத்தை அதிகமாக்கி ஆவேசத்தை உண்டுபண்ணியது போலும்!

''என்ன சொன்னாய்? நான் ஒன்றும் உங்கப்பா மாதிரி கஞ்சப் பிரபு இல்லையாக்கும்! நான் ஒன்றும் பின்வாங்க மாட்டேன் உங்கப்பா மாதிரி. என் பெண், மாப்பிள்ளைக்குக் காஷ்மீர் போக வரச் செலவுக்கும் கொடுத்து ரயில்வே டிக்கெட்டும் எடுத்துக் கொடுப்பேனாக்கும்!'' என்று குதியாய்க் குதித்தார்.

''அத்தனைக்கும் உங்களுக்குச் சக்தி இருக்கும்போது ஏன் என்னிடம் வம்புக்கு வர வேண்டும்? காஷ்மீர் என்ன, ஜப்பானுக்கே டிக்கெட் எடுத்து அனுப்புங்களேன் உங்கள் பெண்ணையும் மாப்பிள்ளையையும்!'' என்று வார்த்தைகளைக் கொட்டிவிட்டு உள்ளே சென்றேன். அவரும் ஒரு சட்டையை மாட்டிக்கொண்டு வெளியே போய் விட்டார். எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு அவர் எங்கப்பாவைக் குறைவாகப் பேசியது மனசுக்கு கஷ்டமாக இருந்தது. அன்று முழுதும் அவருடன் முகம் கொடுத்துப் பேசவே பிடிக்கவில்லை.

இரவுச் சாப்பாடெல்லாம் முடிந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார்.

பட்ஜெட்டில் விழுந்த துண்டைச் சமாளிக்க என் முழு ஒத்துழைப்பு அவருக்கு இப்பொழுது தேவை. எனக்கோ பழைய சம்பவத்தைச் சொல்லி அவரைச் சீண்டலாமே என்ற எண்ணம். ''கவிதா, ஒரு கதை சொல்லிறேன், கேள்!'' என்று ஆரம்பித்தேன். ''என் தலை தீபாவளியின் கதைதான் நான் சொல்லப் போவது. எனக்கு அப்போது வயது பதினேழு. உன் அப்பாவுக்கு வயது பத்தொன்பது. பி. ஏ. இறுதி ஆண்டு படித்துக் கொண்டிருந்த சமயம். உன் அப்பா வயதில் ரொம்பச் சிறியவராகையால் தலை தீபாவளிக்கு அவருடன் குடும்ப நண்பரான தாமோதரன் என்பவரைத் துணைக்கு அனுப்பி இருந்தார்கள்.

''தீபாவளிக்கு முதல்நாள் உன் அப்பாவும் அந்த நண்பரும் வந்தார்கள். மறு நாள் தீபாவளி சம்பிரதாயமாக நடந்தது. கங்கா ஸ்நானம், மாப்பிள்ளை உபசரிப்பு எல்லாம் சம்பிரதாயமாக நடந்தது.

''என் மாமியார் எனக்குக் கொடுத்தனுப்பிய விலை உயர்ந்த புடவையைக் கட்டிக் கொண்டேன். என் அம்மா எங்கள் வீட்டிலிருந்த விலை உயர்ந்த நகைகளையெல்லாம் தலையிலிருந்து கால் வரை பூட்டி விட்டாள். உங்கப்பாவையும் அவர் சிநேகிதரையும் நமஸ்கரித்தேன். கூடவே நின்றுகொண்டிருந்த என் தந்தை, 'மாப்பிள்ளே! குழந்தை கழுத்தில் போட்டுக் கொண்டிருக்கிறாளே, காசு மாலை! எத்தனை பவுன் தெரியுமா? சரியாக நூறு பவுன். அறுபது முழுப் பவுன்கள் காசுகளாகக் கோத்து இருக்கிறதாக்கும் மற்ற வேலைப்பாடுகளுக்கு நாற்பது பவுன்கள். இந்த நகை எங்கள் குடும்பத்தில் மூன்று தலைமுறைகளாக இருந்து வருகிறது' என்று அவர் பாட்டுக்கு உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டு போனார். ஊரிலிருந்து வந்திருந்த நண்பர் சுவாரசியமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். தீபாவளிக்கு மறு நாள் உன் அப்பாவும் சிநேகிதரும் ஊர் போய்ச் சேர்ந்தார்கள்....

''தீபாவளி கழிந்து ஒரு வாரம் சென்றது. என் மச்சினர், அதாவது உன் பெரியப்பா ஒரு கடிதம் எழுதியிருந்தார். தீபாவளி ரொம்ப நன்றாக நடந்ததைப் பற்றித் தம் குடும்பத்தில் எல்லோரும் வெகுவாக சந்தோஷப்படுவதாவும் நூறு பவுன்கள் கொண்ட காசு மாலையை, அதுவும் பரம்பரை குடும்பச் சொத்தை சௌ. விசாலத்துக்குத் தீபாவளிப் பரிசாகக் கொடுத்ததைப் பற்றித் தங்கள் குடும்பத்தில் அனைவரும் சந்தோஷப்படுவதாகவும், எழுதி யிருந்தார்.

''அவ்வளவுதான். என் அப்பா அப்படியே கையில் பிரித்த கடிதத்துடன் இடிந்தே உட்கார்ந்து விட்டார். திடீரென்று நூறு பவுன் நகையை எனக்குப் போடுவதாவது? மற்ற வாரிசுகளின் கதி என்ன ஆவது?

''இதற்கென்ன வழி என்று அப்பா முழிக்க என் அம்மா வாயை அநாவசியமாகக் கொட்டுவானேன் என்று சீற வீடு யுத்த களமாயிற்று. இருதலைக் கொள்ளி போன்ற நிலைமை எனக்கு: என் அம்மா தீர்மானமாகச் சொன்னது இதுதான்: 'அநாவசியமாக மாப்பிள்ளையையும் அவர் நண்பரையும் வைத்துக் கொண்டு நகையைப் பற்றி யார் விமரிசிக்கச் சொன்னார்கள்? அவர்கள் ஏதாவது கேட்டார்களா? நீங்கள்தானே வாயைக் கொடுத்து அகப்பட்டுக் கொண்டீர்கள். இதற்கு இரண்டே வழிகள்தான் இருக்கின்றன. ஒன்று நகையைச் சும்மா போட்டுப் பார்த்தோமே தவிர அவளுக்குக் கொடுக்கவில்லை என்று தைரியமாகச் சொல்லி விடுவது. அதற்குத் தைரியமில்லையென்றால் பேசாமல் அந்த நகையை விசாலத்துக்குப் போட்டு, அனுப்பி விடுவது!' என்று நறுக்குத் தெரித்தாற்போல் சொல்லி விட்டுச் சமையலறைக்குச் சென்றுவிட்டாள்.

''அப்பா தம் தைரியமெல்லாவற்றையும் சிரமப்பட்டு வரவழைத்துக் கொண்டு என் மச்சினருக்குக் கடிதம் எழுதிப் போட்டார். குடும்பச் சொத்தான அந்த நகையை விசாலத்துக்கு அழகு பார்ப்பதற்காகப் போட்டதே தவிர அவளுக்குக் கொடுக்கவில்லை என்று கூறி விட்டு வீணாகத் தப்பபிப்பிராயம் ஏற்படுத்தியதற்குத் தம்மைப் பல தரம் மன்னிக்கும்படியும் கெஞ்சி யிருந்தார்.

''அதற்குப் பதில் இன்னமும் வரப் போகிறது. அந்த மன உளைச்சலும் கசப்பும் ரொம்ப நாள் இருந்து கொண்டு என் வாழ்க்கையை வேம்பாக்கியது. இளம் வயதில் இன்பமான நினைவுகள் இருக்கவேண்டிய மனத்தில் எவ்வளவோ கஷ்டங்கள்! அதனால்தான் சம்பந்திகளிடமோ மாப்பிள்ளையிடமோ வீணாக வாயைக் கொடுத்துவிடக் கூடாது!'' என்று எங்கேயோ கொண்டுவந்து நிறுத்தினேன்.

''ஏம்மா, இப்போ இந்தக் கதை, கடைசியில் சொன்ன உபமான உபமேயம் எல்லாம் எதற்கு?'' என்றாள் கவிதா.

அவர் என்னை முறைத்துப் பார்க்க நான் எங்கேயோ பார்க்க அவளுக்குப் பதில் என்ன சொல்வதென்று விழித்தேன்.

இவர்தான் சமாளித்துக்கொண்டு, ''எனக்குப் பாடம் கற்றுத் தருகிறாள் உன் அம்மா!

# நீடித்துழைப்பவை!

டுலக்ஸ் பெயிண்ட்டுகள் நீடித்துழைப்பதற்குக் காரணம், இவை உயர் வானதும் பூரணமாகக் கழுவக் கூடிய முடிவான தோற்றத்தைக் கொடுக்கிறது. மேலும் ஐஸிஐ தரத்தையே தனது அதி முக்கிய மூலப் பொருளாகக் கொண்டது.

ICI
DULUX

அழகிற்கு வருடக் கணக்கில் அழகு நிலைத்திட




டுலக்ஸ் பெயிண்ட்

டுலக்ஸை தயாரித்து விற்பவர்கள்: தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா லிமிடெட்.

டுலக்ஸ்—இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட், லண்டனின் வியாபாரச் சின்னம்.

பதிவு பெற்ற உபயோகிப்பவர்கள்: தி ஆல்கலி அண்டு கெமிகல் கார்ப்பரேஷன் ஆஃப் இந்தியா லிமிடெட்.

ACCI (P) 6220

# RENEWED GROWTH WITH DALMIA REFRACTORIES

உஷ்ணத்தின் அடிப்படையிலே இயங்கும் தொழிற்சாலைகளுக்கு "ரிஃப்ராக்டரீஸ்" (சுட்ட கற்கள்) இன்றியமையாததாக இருப்பதால், நாளுக்கு நாள் வளர்ந்துவரும் நமது தொழில்களுக்கு "ரிஃப்ராக்டரி"களின் தேவையும் பெருகி வருகிறது.

ஆசியாவிலே "ரிஃப்ராக்டரி" உற்பத்தியாளர்களில் முதல் ஸ்தானம் வகிக்கும் டால்மியாவின் இரண்டு நவீன தொழிற்சாலைகளில், சுட்ட கற்கள், ரசாயன முறையில் இறுக்கப்பட்ட கற்கள், மித, அதிக, மிக அதிகமான உஷ்ணத்தை தாங்கவல்ல செங்கற்கள்; மணற் சத்துள்ள செங்கற்கள், கையனைட், ஸிலிமினைட் மற்றும் திராவகங்களைத் தாங்கக்கூடிய செங்கற்களையும் தயாரிக்கிறார்கள். வாடிக்கையாளரின் விசேஷ தேவைக்கேற்பவும் தயாரிக்கிறார்கள்.



**ஒரிஸா சிமெண்ட் லிமிடெட்**
**ராஜ்கங்பூர், ஒரிஸா**

பூரண விற்பனை ஏஜன்டுகள்:
M/s. S. G. சப்ளை ஏஜன்ஸி
48-D, முக்தாராம் பாபு தெரு, கல்கத்தா

உலைக் கற்கள் தயாரிப்பாளர்கள்:
டால்மியா செராமிக் இண்டஸ்ட்ரீஸ்
டால்மியாபுரம் (தமிழ்நாடு)
H. O. 4, சிந்தியா ஹவுஸ், புதுடில்லி-1



உன் வீட்டாரிடம் நான் ஏதேனும் உளறுவதற்கு முன் எச்சரிக்கை செய்கிறேன்!'' என்றார் அழுத்தமாக.

''அம்மா! நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே. இந்த நாளில் அந்த மாதிரி மன வேறுபாடுகளே வராது!'' என்று எனக்குத் தைரியம் சொல்லி விட்டுப் படுத்துக் கொள்ளப் போய் விட்டாள் கவிதா.

காஷ்மீர் சமாசாரம் என்னவானாலும் காகமாலை விஷயம் மனத்தில் ஏதேதோ புதிய கற்பனைகளை யெல்லாம் திரட்டிக்கொண்டு வந்தது. மனஸ்தாபங்கள், எவ்வித வேறுபாடுகள் இல்லாமல் கல்யாணம் நல்லபடியாக நடக்க வேண்டுமே என்ற கவலை இருவர் மனத்திலுமே வந்து விட்டது.

கல்யாணங்கள் எப்படிச் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றனவோ, அதே மாதிரி அதற்கு ஆகவேண்டிய செலவுகளையும் யார் மூலமாகவோ ஏற்பாடு செய்து சரி பண்ணி விடுகிறான் அவன்.

எப்படி இந்தக் கலியாணம் நடக்கப்போகிறது என்ற கவலை போய் எதிர்பார்த்த இடங்களைத் தவிர எதிர்பாராமலும் பண வசதிகள் ஏற்பட்டு நிலைமை நன்றாகச் சமாளிக்கப்படும் என்ற திருப்தி வந்து விட்டது.

கல்யாணத்துக்கு முதல் நாள் சம்பந்திகளும் மாப்பிள்ளையும் வந்தாயிற்று. வீடு திமிலோகப்பட்டது. எனக்கு மூச்சு விடக் கூட நேரமில்லை. மாப்பிள்ளை இறங்கியிருக்கும் விடுதியிலிருந்து மாப்பிள்ளையே வந்து ''கவிதா எங்கே மாமி? அவளை ஒரு நிமிஷம் பார்க்க வேண்டும்!''...' என்றார்.

எனக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. அசாத்திய அவசரக் காரராயிருப்பார் போலிருக்கிறதே என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்டேன். அதற்குள் தோழிகள் சூழ உட்கார்ந்திருக்கும் கவிதாவே அவர்கள் செய்யும் கேலிகளையும் பொருட்படுத்தாமல் மெதுவாக எழுந்து வந்து கொண்டிருந்தாள். இருவரும் ஒருவரையொருவர் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டனர். குழந்தைகள் தீர்க்காயுளுடன் சகல சம்பத்துக்களுடனும் இருக்க வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டேன்.

குமார் கவிதாவின் அருகில் வந்தார். அவள் அலங்காரங்களை மிக ஆவலுடன் பார்த்தார். கனிவுடன் காதல் ததும்ப அவளைத் தட்டிக் கொடுத்தார். ''பிரமாதம்! அழகு கொஞ்சுகிறது!'' என்று சொல்லிவிட்டுத் தம் இருப்பிடம் சென்றுவிட்டார். கூடமே சிரிப்பிலும் கைதட்டலிலும் அதிர்ந்தது.

கலியாணமெல்லாம் வெகு அழகாக நடந்தேறியது. சம்பந்திகள் வெகுவாக ஒத்துழைத்தார்கள். கவிதா மாப்பிள்ளையுடன் கிளம்பும் நேரம் வந்தது. மாப்பிள்ளை இவரிடம் தமக்கும் கவிதாவுக்குமாக வாங்கிய டிக்கெட்டுக்குண்டான பணத்தை வலுக் கட்டாயமாகக் கொடுக்க மன்றாடியதையும் இவர் பணத்தை வாங்க மறுப்பதையும் பார்த்துக் கொண்டிருந்த நானும் பணத்தை வாங்க மாட்டோம் என்று குறுக்கே நின்றேன்.

நீண்ட நேர வாக்குவாதத்தின் முடிவில் ங்கள்தான் ஜயித்தோம்.

## அதிசய மருத்துவப் பெட்டி!

அமெரிக்காவில், நியூயார்க் மாநிலத்திலுள்ள ஆல்பனி மருத்துவக் கல்லூரியில் ஆராய்ச்சித் துறை மாணவர்களின் முயற்சியில் உருவாக்கப்பட்ட ஒரு புதிய கருவி ஆஸ்பத்திரி நூலகங்களிலும் டாக்டர்கள் ஓய்வெடுக்கும் அறைகளிலும் வரவர அதிகமாக இடம் பெற்று வருகிறது.

டாக்டர்கள் கேட்கும் கேள்விகளுக்கு அது உடனே பதில் சொல்கிறது. அது மட்டும் அல்ல; அதில் ஒரு திரை இருக்கிறது. அந்தத் திரையில் மருத்துவத் துறைத் தகவல்களை விளக்கும் வர்ண ஸ்லைடுகள் காட்டப்படுகின்றன. இன்னும் ஓர் அதிசயம்! சில பெட்டிகள், கேட்ட கேள்விகளுக்கு உரிய பதில்களை



அச்சிடப்பட்ட கார்டுகளாக நீட்டுகின்றன! இன்னும் சில, டாக்டர்களின் கேள்விகளைப் பதிவு செய்து வைத்துக் கொண்டு, அவற்றுக்கான விடைகள் தபாலில் வரும் என்கின்றன.

நூற்றுக்கணக்கான டாக்டர்களையும், எழுபத்திரண்டு ஆஸ்பத்திரிகளையும் இணைக்கும் இரு வழி வானொலி இணைப்பு ஒன்றைச் சில ஆண்டுகளுக்கு முன்பு ஆல்பனி மருத்துவக் கல்லூரி நிறுவியது. டாக்டர்களும், ஆராய்ச்சியாளர்களும் மருத்துவத் துறையில் கண்டுபிடிக்கப்படும் நூதனமான முன்னேற்றச் சாதனங்கள் குறித்து மேற்படி வானொலி இணைப்பின் மூலம் வாரந்தோறும் விவாதங்கள் நடத்தி வருகின்றனர்.

ஆதாரம்: பேஜண்ட்
தகவல்: விஜயம்

குழந்தை கவிதா பிரியும்போது கண்கள் அருவியெனக் கொட்டியது. கண் நிறைந்த கணவனோடு அவள் சந்தோஷமாக இருக்கத்தான் இந்தப் பாடு பட்டோமென்பது தெரிந்தும் பாழும் மனசு அஞ்ஞானத்தில் கலங்கியது.

வீடு கல்யாணக் களை யெல்லாம் போய் வெறிச்சென்றாகி விட்டது. பித்துப் பிடித்தவள் மாதிரி உட்கார்ந்திருந்தேன்.

''விசாலம்! நாம் பயந்து கொண்டிருந்ததற்கு மாறாகவே எல்லாம் நன்றாக நடந்து விட்டது. நாம் நம்பியதெல்லாம் நம்மைக் கைவிடவில்லை என்று சொல்லிவிட்டு, பெண்ணாகவே பிறக்கக் கூடாது என்பாயே!'' என்றார்.

''இந்த மாதிரி சம்பந்திகளும் மாப்பிள்ளையும் மாதிரி மனமறிந்து நடந்து கொண்டால் எந்தெந்தப் பிறவியிலும் பெண்ணாகவே பிறந்து கவிதா மாதிரி பெண்களைப் பெற்றே ஆகவேண்டும் என்றும் தோன்றும்!'' என்றேன் பூரிப்புடன்.

''காகமாலை விவகாரம்!'' என்றார் குறும்புடன். ''காஷ்மீர் பணத்தோடு காகமாலை விவகாரத்தை மறந்து விட்டேன்!'' என்றேன் நிறைவுடன். ''பேஷ்!'' என்று இவர் சந்தோஷ மிகுதியால் என்னைத் தட்டிக்கொடுத்தார். இருவர் மனமும் நிறைந்துபோயிருந்தது.

குளிர்காலத்திலும் சரி,
கோடைகாலத்திலும் சரி—
மார்கோசோப்
சுத்தம் செய்வதோடு மட்டும்
நிற்பதில்லை—
சருமத்தை பாதுகாக்கிறது.

**ஏனெனில் மார்கோவில்
மட்டுமே வேப்பெண்ணெய்
சேர்ந்துள்ளது.**




**மார்கோசோப்**

ஒரு கல்கத்தா கெமிகலின் தயாரிப்பு

# அழைக்கின்றான்

சுட்டும் விழிகள் சுடரிரண்டும்
கோடி சூரியப் பிரகாசம்
கொட்டும் அள்ளிக் கருணைதான்
குளிர்ந்த சந்திரன் நிலவினைப்போல்
பட்டுப்போன்ற கன்னங்கள்
பித்துக்கொள்ளச் செய்திடுமோ
மொட்டு அவிழும் முறுவலுமே
மோனம் தன்னில் ஆழ்த்திடுமே.

கோடி சூரியப் பிரகாசம்
கோமளக் கண்ணன் உருவந்தான்
தேடிக் கிடைக்காத திருவுருவம்
தாடி என்னை அணைத்ததம்மா
வாடும் பயிரும் செழித்திடவே
வானம் பொழிந்த நீரைப்போல்
தேடும் அடியார் உய்ந்திடவே
தேவன் அருளை மொழிந்தானே.

கோமளக் கண்ணன் உருவந்தான்
கரிய முகிலின் சாயலடி
சாமள மேனியன் இடையினிலே
சரிகை மஞ்சள் பட்டாடை
காமனைப் பழிக்கும் கண்ணழகன்
கையினில் கண்டாய் வேய்ங்குழலும்
பாமர மக்கள் உய்ந்திடவே
பரமன் கொண்ட திருக்கோலம்.

கரிய முகிலின் சாயலடி
கண்ணன் கொண்ட வண்ணமடி
பெரியன் தனக்கே உவமையுண்டோ
பிச்சியானேன் அவன் தனக்கே
உரிமை கொண்டான் உத்தமனும்
உள்ளம் உடைமை எல்லாமே
அருமை அருமை அருமையடி
அண்ணல் அன்பும் அருளுமடி.

கண்ணன் கொண்ட வண்ணமடி
கண்ணுள் நிற்கும் என்றுமடி
பண்ணில் அமைந்த பாவினைப்போல்
பரமன் உகுத்த சொற்களுமே
விண்ணி னின்றும் இழிந்தனவே
விரைந்து என்னுள் கலந்தனவே
கண்ணன் காலடி சேராமல்
கணமும் தாளேன் இனியும் நான்.

காமாக்ஷி






☐ இக் குறியிட்ட கடிதம் ரூ. 15/- பரிசு பெறுகிறது.

நான் சமீபத்தில் சேலம் மாவட்ட நூல் நிலைய ஆணையாளரால் நடத்தப்படும் எங்கள் ஊர்க் கிளை நூலகத்துக்குச் சென்றிருந்தேன். அங்கிருந்த லைப்ரேரியனிடம் சென்று ''தாயுமானவர் பாடல்கள் உரையுடன் இருக்கிறதா?'' என்று கேட்டேன். அவர் மிகுந்த அன்புடன் ''பார்த்துச் சொல்கிறேன்'' என்று கூறித் தம் உதவியாளர் களைத் தேடச் சொன்னார். அவர்கள் காகித அட்டையுடன் கூடிய சிறிய புத்தகங்களாகத் தேட ஆரம்பித்தனர். ''அது பைண்ட் செய்ததாகப் பெரிய புத்தகமாக இருக்கும்'' என்று நான் கூறினேன். பின்பு 'பரிபாடல் மூலமும் உரையும்', 'திருக்குறள்' இவை களைக் காட்டி, ''இதுவா?'' என்று அவர்கள் கேட்டனர். ''அது மத சம்பந்தமான நூல்'' என்று நான் கூறினேன்.

பின்னர் லைப்ரேரியன் என்னிடம் வந்து, ''நூலின் ஆசிரியர் யார்?'' என்று கேட்டார். ''தாயுமானவர்'' என்றேன் நான். பின்பு, ''நூலின் பெயர் என்ன?'' என்று கேட்டார். ''தாயுமானவர் பாடல்கள்'' என்றேன். ''நூல்களின் பட்டியல் இருக்கிறதா? நானே பார்க்கிறேன்'' என்று நான் கூறினேன். இரண்டு பெரிய ரிஜிஸ்தர்களை என்னிடம் கொடுத்தார் லைப்ரேரியன். அவற்றில் விஷய வாரியாக நூல்கள் பிரிக்கப்படவில்லை. நான் பல பக்கங்களைப் புரட்டிக் கொண்டிருந்தேன். அப்பொழுது லைப்ரேரியன், ''உங்களுக்கு ஆசிரியர் பெயரும் தெரியவில்லை, நூலின் பெயரும் தெரியவில்லை, எப்படிக் கண்டு பிடிப்பது?'' என்று கூறி என்மீது பரிதாபப் பட்டார். மேலும் அவருடைய பரிதாபத் துக்கு இடமாக இருக்க விருப்பமில்லாததால் நூல் நிலையத்தை விட்டு வந்துவிட்டேன்.

குமாரபாளையம்,
2—12—70 — சு. குருசாமி.

ஓர் அவசர காரியமாக எனக்குத் திருப்பூர் வரை செல்ல வேண்டியிருந்தது. இரவு மணி எட்டரை அப்போது. திருப்பூர் வழியாகச் செல்லும் இலண்ட் எக்ஸ்பிரஸ் கோவைக்கு வரும் நேரம் சரியாகத் தெரியாத காரணத் தால் ரயில்வே ஸ்டேஷனுக்கு நேரமறிய 'போன்' செய்தேன். ரொம்ப நேரம் மணி அடித்தது; அங்கே எடுப்பார் யாருமில்லை !

நானும் முயற்சியைக் கைவிடாது மீண்டும் 'போன்' செய்தேன். நாதியற்று மணி ஒலித்தது. சரி, சம்பந்தப்பட்ட குமாஸ்தா வெளியே சென்றிருப்பார் என்று நினைத்துப் பத்துப் பதினைந்து நிமிடங்கள் கழித்து மறுபடியும் 'போன்' செய்ய அங்கே ரிஸீவர் எடுக்கப்பட்டது. ''ஹலோ'' என்ப தற்குள் 'டொக்'கென்று போனை வைத்து விட்டனர்; மறுபடியும் மறுபடியும் இதேநிலை!

என் ஆத்திரத்தை ஒன்றாகத் திரட்டிச் சென்னை நல்லமை நிலையத்துக்குத் தபால் போட்டேன். நாலைந்து நாட்கள் கழித்துப் பதில் வந்தது. ''ஐயா, உங்கள் புகாரை நாங்கள் கவனிக்க இயலாது. விசாரிக்கும் பொறுப்பு ஒலவக்கோடு பிரிவைச் சேர்ந்தது. எனவே, உங்கள் புகாரை அங்கே அனுப் புங்கள்'' என்றிருந்தது.

நானும் சளைக்காது ஒலவக்கோட்டுக்கு அனுப்பி இன்றோடு இரண்டு மாதங்கள் ஆகி விட்டன. இதுவரை எந்தவிதமான பதிலும் இல்லை. நடவடிக்கை எடுக்கிறார்களோ இல் லையோ, நான் செய்த புகாருக்கு மதிப்பளிக் கும் வகையில், 'உங்கள் புகார் பரிசீலனையில் உள்ளது' எனப் பதில் போட்டால் என்ன குறைந்து போகும் ?

கோயமுத்தூர் — 1
1—3—71 — வி. ஏ. நஜீர் அஹமத்

☐ நான் என் புகுமுக வகுப்பை ஆங்கிலத்தில் படித்துத் தேறினேன். ஆனால் அதன் பின் இளங்கலை வகுப்பையும் ஆங்கிலத்திலேயே தொடர எண்ணிய எனக்கு ஒரு பெரும் ஏமாற்றம் காத்திருந்தது. தமிழில்தான் கட்டாயமாக எல்லாப் பாடங்களையும் படித் தாக வேண்டும் என்ற நிலை. எங்கள் கல்லூரி அரசினர் கல்லூரியாதலால் நானும் எனது தோழிகளும் ஆங்கில மீடியத்தில் படிக்க இயலாமல் வேறு வழியின்றித் தமிழ் மீடி யத்தில் படித்து 1969—70ல் தேறினோம். எங்களைப் போல் இன்னும் எத்தனை எத்த னையோ மாணவ, மாணவியர் அரசாங்கத் தின் ஆணவப் போக்கினால் பாதிக்கப்பட்ட னர். ஆனால் தற்போது தேர்தலில் வாக்கு களைப் பெற வேண்டி அவசரம் அவசரமாக ஒரு கமிட்டியை அமைத்து மாணவர்கள் விருப்பப்படி ஆங்கிலமோ, தமிழோ எந்த மீடியத்தில் வேண்டுமானாலும் படிக்கலாம் என்று தமிழக அரசு கூறுகிறது. இந்த இரட்டை மனப்பான்மை தமிழக அரசின் சந்தர்ப்பவாதப் போக்கைக் காட்டுகிறது.

கும்பகோணம்,
2—3—71 — என். ஜெயம்

இந்தியாவில் போலீசாரின் நிலை பரிதாபத் துக்குரியதாக இருக்கிறது. ஆளும் கட் சிக்கு வேண்டியவர் எந்தத் தவறு செய்தாலும் போலீசாருக்கு எந்த நடவடிக்கையும் எடுக்க முடிவதில்லை. ஆகையால் போலீசார் கவர்ன ரின் நேரடி ஆணைக்கு உட்பட்டவர்களாய் இருக்க வேண்டும். அதே நேரத்தில் கவர்ன ரைத் தேர்ந்தெடுக்கும் முறையும் சரியில்லை. இப்பதவிக்குத் தகுந்தவராகவும் எல்லாக் கட்சியினாலும் மக்களினாலும் மதிக்கப்படுபவ ராகவும் இருக்க வேண்டுமானால் ஓய்வுபெற்ற ஹைகோர்ட் நீதிபதிகளையே தேர்ந்தெடுக்க வேண்டும். அப்போதுதான் மக்களுக்கு நியா யம் கிட்டும்; போலீசாருக்கு ஆளும் கட்சியைக் கண்டு பயப்படாமல் செயல் புரியவும் முடியும்.

பாலக்காடு-11
1—3—71 — ஜெறக். சுந்தரம்






Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# இவர்தான் சங்கரன்

அன்பு நிறைந்த கணவர் • தெம்பே உருவான தந்தை • திறமை மிக்க குடும்பத் தலைவர்



# "எது 'அதுவோ' அதேதான் எனக்கு வேணும்"

நாள் முழுவதும் தெம்போடு இருக்க விரும்புகிறார் சங்கரன். எனவே, நாள்தோறும் அவர் மனைவி அவருக்கு ''ஹார்லிக்ஸ்'' அளிக்கிறார். ஆடை நிறைந்த பால், செழுமையான கோதுமை, மற்றும் இதர உணவுப் பொருள்கள் நிறைந்த ''ஹார்லிக்ஸை'' 80 ஆண்டுகளுக்கும் மேலாக, டாக்டர்கள் சிபாரிசு செய்து வருகிறார்கள். நீங்களும், உங்கள் குடும்பத்தாரும் உடல் நலத்தோடும், உற்சாகத்தோடும் விளங்க நாள்தோறும் ''ஹார்லிக்ஸ்'' அருந்துங்கள்.




## 'ஹார்லிக்ஸ்'– ஆம் அதேதான் !

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon